●

எழுத்து

மரணத்தை வெல்லும் உபாயம்

● – *துறவி*

# அணிந்துரை

முனைவர் மு.பி. பாலசுப்பிரமணியன், எம்.ஏ., பிஎச். டி.,
(முன்னாள் முதல்வர், பச்சையப்பன் கல்லூரி, காஞ்சி)

மோப்பக் குழையும் அனிச்சம் போலவும், தொட்டாற் சிணுங்கி தாவரங்களைப் போலவும் கவிஞர்கள் நுட்பமாக உணர்வுகள் கொண்டவர்களாக இலங்கினாலும் எஃகு போன்ற மன உறுதி கொண்டவர்களாகவும் திகழ்கிறார்கள் என்ற மரபார்ந்த நம்பிக்கைக்கு மற்றுமோர் எடுத்துக்காட்டு கவிஞர் துறவி. எழுதுகோலைத் தன்னிலிருந்து பிரி தொன்றாகப் பிரித்தறியாமல் வாழப் பழகிய கவிஞர் இவர். நீண்ட நெடுங்காலமாக எழுதி வருபவர். எழுதுவதிலேயே இன்பம் காண்பவர். அறிஞர் அண்ணாவின் 'திராவிட நாடு' இதழில் இவரின் கவிதைகள் அச்சான அந்த நாட்களிலேயே நான் இவரை நன்கு அறிவேன். 'காஞ்சி' இதழில் இவர் கவிதைகள் வருவதற்கு வாஞ்சையோடு விழைந்து மகிழ்ந்தவன்.

மரபுக் கவிதைகளில் ஊறித் திளைத்தவர். மாறுங் காலங்களுக்கேற்ப தன் எழுத்து நடையை மாற்றிக் கொண்டாலும் அவரின் உணர்வுகள் எவையும் மாறிவிட வில்லை. கொண்ட கொள்கையின் இலட்சியச் சூடு ஆறிவிட வில்லை. சமூக மதிப்பீடுகளில் தொழுவதற்குரியதான பீடங்களையெல்லாம் 'புதுக் கவிதைகள்' எள்ளி நகையாடி வீதியில் வீசியெறிந்து வருவதை இலக்கிய அன்பர்கள் நன்கு அறிவார்கள். உத்தியும், பாணியும், வடிவும் மேலை இலக்கியத் தாக்கங்களினால் உருப்பெற்றவையெனினும், புதுமையை ஏற்கும் விழைவு, பழைமைச்சாடும் துணிவு, சோதனை முயற்சிகளுக்கான ஆர்வம் இவைகளுக்கான மனத் தயாரிப்புகள் இலக்கியம் சமூகம் போன்ற தளங்களில் ஏற்கெனவே திராவிட இயக்கங்கள் செய்து விட்டிருந்த தினால்— படைப்பூக்கம், படிப்பூக்கம் எளிமையாகி விட்டது. இந்த வரலாற்றுப் பேருண்மையை நேர்மையான திறனாய் வாளர்கள் நன்கறிவர். ஆனாலும் வெளிப்படுத்த அஞ்சு

வதற்கான காரணங்களை நாம் அறிந்தே இருக்கின்றோம். அவர்களை இடித்துரைக்க அல்ல, இடிக்காமல் உரைக்க, துறவியின் இந்நூல் தலைப்பே போதுமான சான்றாகத் திகழ்வதைக் காணலாம்.

'வாழ்க்கை' என்பது மேடை நாடகம் போலவும், கவிஞர் பார்வையாளர் போலவுமானதொரு காட்சிப் படிமம்— இந்நூலைப் படிக்கும்போது நம் மனதில் ஏற்படுவதை ஏனோ தவிர்க்க முடியவில்லை. படைப்புகளின் படிப்பு அனுபவத்தை நாம் நுகரும்போது படைப்பாளனைப் பற்றிய சிந்தனைகளைத் தவிர்க்க முடியவில்லை என்பதே படைப்பாளனின் வெற்றி என்றும் பகரலாம்.

அலுவலகப் புல்வெளிகளிலிருந்து புறப்படும் கவிதைகள் சிறு பூச்சிகளாக பூக்களாக, புற்களாக, மானிடராக, அன்பாக, வற்றாத நதியாக காலந்தோறும் தன் உருமாற்றி— பறக்கின்றன, மலர்கின்றன, அலைகின்றன, நடக்கின்றன, வீசுகின்றன, வெள்ளமெனப் பெருக்கெடுத்து ஓடுகின்றன. 'சொற்காமம்' கொண்டு திரியாத, 'கருத்து காதல் பொங்கும் எழுதுகோல்' இவருக்கு வாய்த்திருக்கிறது.

'மீண்டும் ஒரு பிறவி, என்ற கவிதையில் இவர் விதைத்திருக்கும் நம்பிக்கை விதைகள் ஆயிரம் ஆண்டு களுக்குப் போதுமானது. மரணத்தை அர்த்தப்படுத்தும் இந்தக் கவிதையின் 'மையம்' கருத்துக் கருவறையில் சூல்கொண்டு உயிர்கொண்ட தலைச்சன் பிரசவம் எனலாம். "வாழ்க்கை வரப்பிரசாதம், அதை எச்சில் இலையில் பொட்டலம் கட்டி விடாதே" என்று இவர் கவிதையை முடிக்கும் முத்தாய்ப்பு போற்றத்தக்கது. சட்டத்தின் கட்டுடைப்பு, சமூக அமைப்பின் ஏற்றத் தாழ்வு, சாதி பேதங்கள் போன்ற கேடுகளை எரிக்கும் தீப்பந்தமாகத் தன் எழுதுகோலை ஏந்தியிருக்கிறார், கவிஞர் துறவி.

"குயில்கறி விருந்து சாப்பிட்ட குதூகலத்தோடு
ரயில் ஏறுவோம் தியாகராஜ ஆராதனைக்கு"

என்று எழுதும் அங்கதச் சுவையில் ஊறித் திளைக்கும் தீச்சுடர், இன்றைய சமுதாய அவலத்தை தீய்த்துப் பொசுக் கிறது.

"இந்திய நாட்டுச் செடிகளுக்குப் பூ பூக்க அச்சம்
அத்தனைப் பூக்களும் பிணங்களைப் அலங்கரிக்க பயன்படுவதால்"

என்ற வரிகளைப் படிக்கும்போது அதிர்ச்சி ஏற்படுகிறது. ஒரு நேர்மையான சராசரி மானுட உணர்வுகளின் கலவையாக இவரின் கவிதைகள் சம காலத்தைப் பிரதிபலிக்கின்றன. மொழிவதில் எளிமையும் திறமையும் கை கூடியிருப்பதோடு கலை அம்சம் உன்னதமாகக் கொண்டாடப் படுகிறது. உயிர்ப்புள்ள கவிதைகளை இந்தத் தொகுப்பில் உலவ விட்டிருக்கும் கவிஞர் துறவி — இத்தகு படைப்புகளின் மூலம் தமிழ் இலக்கிய வரலாற்றில் ஒரு தனி முத்திரையைப் பதிப்பதில் வெற்றி பெறுகிறார் எனலாம். அத்துடன் சமூக மாற்றத்துக்கான விதைகளையும் விதைத்திடத் தவறவில்லை அவர். இதோ ஒரு சிந்தனை விதை,

"கீதை ஒரு இந்துவை உருவாக்குகிறது.
பைபிள் ஒரு கிறித்தவனை உருவாக்குகிறது.
குரான் ஒரு முஸ்லீமை உருவாக்குகிறது.
இந்த மூன்றும் சேர்ந்து மனிதனை உருவாக்க
எப்போது முயற்சிப்பது?"

மானுடநேயத்தின் மறுபதிப்பாகவே, 'கவிஞர் துறவி இக்கவிதை மூலம் நமக்குக் காட்சியளிக்கிறார்.

"மானுடத்தின் முகத்தில் எச்சில் துப்ப
மதங்களை அனுமதித்தால்
தேசத்தின் மேனியில் காயங்கள்
ரத்தம் துப்பும்!"

மதக் கலவரங்களால் மானுட நேயம் மடிந்து போகலாமா? என்ற ஏக்கத்தோடு தம் எழுதுகோலின் கூர்மையை வெளிப்படுத்திக் காட்டுகிறார் கவிஞர் துறவி.

"எழுத்து, மரணத்தை வெல்லும் உபாயம்"

என்னும் வைரவரி, கவிஞர் துறவிக்கும் பொருந்தும். அவர் எழுத்தால் புகழ்வானில் என்றும் சுடர்விட்டு ஒளிர்வார் என்ற நம்பிக்கை எனக்கு உண்டு. அந்த நம்பிக்கையுடன், கவிஞர் துறவியை நெஞ்சார வாழ்த்தி மகிழ்வேன்.



# எனது அலுவலகப் புல்வெளியிலிருந்து

மனிதனிலிருந்து
கவிஞனாகும் முயற்சியில்
இதோ
இன்னொரு படி
எட்டியிருக்கிறேன்.

சமூகத்தின் சகலரையும்
எனது
கவிதைகள்
தொட்டிருக்கின்றன;
தேடிவரும் கடிதங்களே
இதை எனக்குத்
தெரிவிக்கின்றன.

ஒரு
தொலைதூரக்
கிராமத்து வாசகனிடமிருந்து
பாராட்டுக்கடிதம் வரும்போது
அடிமனசுக்குள்
ஆனந்தம்
ஆயிரம் இதழ் விரிக்கும்.

இந்த எதிராலிகளில்தான்
ஒரு படைப்பாளியின்
வெற்றி எதிரொலிக்கிறது

எழுத்து
மரணத்தை வெல்லும்
உபாயம்!
சராசரி
மனித உடல்
நாளை
சிதைத் தீயில்
சாம்பலாகலாம்;

புதையுண்டு
புழுவுக்கு ஆகாரமாய்
போகலாம்.

புத்தகங்களால்
புதுப்பித்துக் கொள்ளும்
என்னைத் தீண்ட
மரணத்தாலும் முடியாது!

ஒவ்வொரு உதயத்திலும்
எனது ஆயுளை
அருணோதயக் கிரணங்கள்
அள்ளி அள்ளிப் பருகலாம்;

ஆனால்
ஒவ்வொரு
கவிதைப் புத்தகம்
வெளிவரும்போதும்
மீண்டும் எனக்கு
ஆயுள் சுரந்து விடுகிறது.

இப்போதாகிலும்
எனது
அலுவலகத்திற்கு
நன்றி நான்
சொல்லியே ஆகவேண்டும்.

ஓர்
அழகான பெண்ணின்
நெற்றிக் குங்குமம்போல்
அண்ணா சாலையில்
அமைந்திருக்கும்
'அக்கவுண்ட்டன்ட் ஜெனரல்'
அலுவலகம்
வெறும்
காகிதக் கிடங்கல்ல;

அது
கான்கிரீட் அமுதசுரபி.

இது எனக்கு
பணமும் கொடுத்தது
கவிதையும் வழங்கியது.

புத்தகத்தில்
படித்ததை விடவும்
நான்
அதிகம் படித்தது
இந்த நான்கு மாடிக்
கட்டிடத்தில்தான்!

எனது
அலுவலகப்புல்வெளியிலிருந்து
எத்தனையோ
கவிதைப்பூக்கள்
சேகரித்தேன்!

ஒரு
குடைபோல் கவிந்து
நிழல் பரப்பும்
வேப்பமர அடியில் அமர்ந்து
எனது
அனுராகக் கனாக்களுக்குக்
கவிதை நிறம் பூசி
அலங்கரித்தேன்!

இந்த
அலுவலகத்துத்
தோட்டப் பூக்களில்
வண்டுகளோடு சேர்ந்து
நானும்
கவிதை குடித்தேன்!

துணிக்கடையில்
அடுக்கிவைக்கப்பட்ட
வண்ணச் சேலைகளாய்
இங்கேதான்

எத்தனைவிதமான
வாழ்க்கைகள்!

இந்த
அலுவலகத்து
அத்தனை திசைகளிலும்
கவிதைகள்...கவிதைகள்!

கட்டிவைத்த கோப்புகள்,
விரிந்து கிடக்கும்
லெட்ஜர்கள்,
அந்த
லெட்ஜர்களைப் புரட்டும்
மருதாணி பூசிய
பெண்ணின் விரல்கள்.

சட்டென்று
ஒலித்து நிற்கும்
தொலைப்பேசி மணியோசை.

மௌனத்தைக்
காயம் செய்யும்
டைப்ரைட்டர் சப்தம்.

படியேறும் மங்கையரின்
பாதக்கொலுசுகளின்
கொஞ்சல்கள்!

யாரோ ஒருபெண்ணின்
கூந்தலிலிருந்து
படிக்கட்டில் உதிர்ந்துகிடக்கும்
ஒரு பூவின் பரிதாபம்!

அலுவலகத்தேர்வில்
வெற்றி கண்டவரின்
இதழ்களில்
நிரம்பி வழியும்
புன்னகைகள்!

தலைப்பிரசவத்திற்குத்
தயாராதிக் கொண்டிருக்கும்
ஓர் இளம் மனைவியின்
கை நிறையக் குலுங்கும்
வளைகாப்பு வளையல்கள்!

பார்வைச்சிறகுகட்டி
இதயங்களைப்
பறக்கவிடும் இளசுகள்!

பிள்ளைக்கு
மருத்துவம் பார்க்க
கடன் கேட்டு
அங்குமிங்கும்அலையும்
ஓர் ஊழியரின் சோகம்.

மாலைநேர
மதுவருந்தி மயங்க
ஐந்துக்கும் பத்துக்கும்
அலைபாயும் இன்னுமோர்
ஊழியரின் அவதி!

ஓர் அடிமைபோலச்
சங்கிலியால்
பிணைக்கப்பட்டுக்
குளிர்ந்த நீர்த்தொட்டியில்
தொங்கும்
குடிக்கும் டம்ளரின் அவலம்!

அம்மாக்களைத்தேடி
அலுவலகம் வந்து சேரும்

பள்ளிப் பிள்ளைகளின்
புத்தகச் சுமை!
கடன் படிவத்தோடு
வங்கி நோக்கி விரையும்
ஊழியரின்
காலடிச் சுவடுகள்!

குடிகாரத் தகப்பனோடு
அலுவலகம் வந்து
கட்டிடப் பிரமிப்பல்
பேந்தபேந்த விழிக்கும்
ஒரு சிறுவனின்
கண்களில் வழியும் சோகம்.

மேகத்தைப் பறிக்க
நீண்ட
அலுவலகத்து விரல்களாய்
ஆகாயம் நோக்கி உயர்ந்த
அசோகமர இலைகளின்
சலசலப்பு!

எங்கோ
இலைகளுக்குப் பின்னே
ஒளிந்திருந்து
சட்டென்று
சங்கீதக் குரல் எழுப்பி
பரந்து போகும் குயில்!

பாலித்தின் பைகளில்
மிக்சரோடு சேர்ந்து
மணக்கும்
சம்பளநாள் பாசங்கள்

நான்காவது
மாடியிலிருந்து பார்க்கையில்
கீழே
நடந்து போகும்
ஊழியரின் வாமன
வடிவங்கள்.

அத்தனையிலும்
கவிதைகள்....கவிதைகள்!
எனது
ஐம்புலன்களுக்கு
இங்கே
ஆகாரத் தட்டுப்பாடே
கிடையாது.

ஒரே நாளில்
ஒரே இடத்தில்
எனக்கு
நவரச தரிசனங்கள்!

இந்த
அலுவலக நதியில்
புனலாடிய பிறகே
என்
கவிதைகளுக்குத்
திசைகள் பூச்சூட்டின!

இங்கு
பணி செய்யும் பேறு
பெறாமல் போயிருந்தால்
ஒரு
நடுத்தர வர்க்கத்து
அரசாங்க ஊழியனாய்

என்
ஆயுள் முடிந்திருக்கும்!

சில
அலுவலகங்கள்
ஊழியனின் உயிர்குடிக்கும்
அரசாங்க மிருகமாய்
அச்சுறுத்தும் போது
எனது அலுவலகமோ
கோடை வெயில் தணிக்கும்
குளிர் மர நிழலாய் எனக்கு!

முப்பத்திரண்டு ஆண்டுகள்
இந்தக்
கட்டிடத்திலா
முடிந்துபோனது?

நினைக்கும்போதே
நெஞ்சுக்குள் வியப்பு
நாற்காலி போடுகிறது!

இது எனக்கு
இரண்டாவது தாய்மடி;
இங்கே
தவழ்ந்து தவழ்ந்து
நான்
கவிஞனாய் வளர்ந்ததால்!

ஒரு
பாறை போல
இங்கே நுழைந்தேன்;
ஒரு
சிற்பமாய் செதுக்கப்பட்டேன்.

ஒரு
மூங்கிலாய்
இங்கே நுழைந்தேன்
ஒரு புல்லாங்குழலாய்
பரிணமித்துப் போனேன்.

இந்த
நதித்துறையில்தான்
நான் தாகம் தணிந்தேன்!
இங்கிருந்தே
எனது கிளைகள்
வேறு வேறு
திசைகளுக்குக் கிளம்பின!

இந்த
பிரகாசக் கிரணங்களால்
எனக்குள் ஓர் விடியல்!

இந்தக்
கவிதைக் குயிலுக்கு
இது கூடும் அல்ல
கூண்டும் அல்ல
பூமரக்கிளை!

எனது சிறகுகளைச்
சிறை செய்யாமல்
ஆனந்தமாய்ப் பறக்கவிட்ட
அரசாங்க ஆகாயம்!

எனது
பாய்மரக்கப்பல்
நினைத்த திக்கெல்லாம்
போய்வரக் கிடைத்த
காகிதக் கடல்!

சந்தியா காலப்
பிரார்த்தனைக்காக
ஒரு கோவிலின்
சன்னதியில் நிற்கும்
பக்தன் போலவே
இந்த
அலுவலகத்தின் முன்னே
நான்!

பூக்கள்
உதிர்வது ஏன் தெரியுமா?
தான் பூத்த
செடியின் வேர்களுக்கு
வணக்கம் செய்யத்தான்!

இந்தக்
கவிதைப் புத்தகமும்
எனது அலுவலகத்திற்கு
என்
ஆன்மாவின் வணக்கம்தான்!

தோழமையுடன்





# காலைகளைத் தீர்மானிக்கும் கிரணங்கள்

ஓ! கண்களே!
உங்கள் பார்வையில்
கோளாறு!

மனப்பறவையே!
உனக்கோ
உபயோகமில்லா
ஒற்றைச் சிறகு!

இதயமே!
சலனமே உனது சாசுவதம்!
நீ எப்படித் துணையாவாய்?
எனது
ஆன்மத் துயரங்களில்
பங்கு பெற உம்மால்
ஆகாது!

இந்த
முடிவற்ற யாத்திரையில்
கானல் மயக்கும்
கண்களுக்கு
குடையாக முடியுமா
உங்களால்?

நெஞ்சில் அடர்த்தியாய்
நிரம்பிக் கிடக்கும்
அச்சக் கறைகளை
அகற்றும் பிரவாகம்
உம்மிடம் ஏது?

நான்
தடுமாறும் தருணங்களில்,
பாசப் பரிவோடு
கைகொடுக்கும் நேசம்
நிச்சயமாய்
உங்களுக்குக் கிடையாது!

வேண்டாம்
உங்கள் துணை எனக்கு
வேண்டவே வேண்டாம்!
எனது நடை
நம்பிக்கையோடுதான்

என் பயணம்
பாலையில் என்றால்
ஒட்டகமாகி
அது
உதவிக்கு ஓடிவரும்

ஆகாயத்தில் என்றால்
சிறகுகளாய் மாறும்!

கடலில் என்றாலோ
படகாகி
எனக்குப் பாதை வகுக்கும்!

எனது வேட்கைக்கு
நீராகும்
தாரக மந்திரம் அதன் வசம்!

சொத்தைக்
கனவுகளைக் களைந்து
கதிர் மணிகளால்
களஞ்சியம் நிரப்ப
அதற்கே சாத்தியம்!

முற்றுகை இட
இருட்டுகள் முயன்றால்
அதன் தீபங்கள்
என்னைத் திடப்படுத்தும்!

ஆம்
இத்தனையும்
நம்பிக்கையால் இயலும்!

தோல்விக் காயங்களுக்கு
மூலிகை
அதன் கிளைகளில்
துளிர்க்கும்.

சோர்ந்துவிடும் போதெல்லாம்
சுகம் தருவது
நம்பிக்கையின் ஆலிங்கனம்!

நான்
தானியம் சேகரித்தால்
பொங்கி உண்ண
அடுப்பு மூட்டும்!

நான்
இழைகள் நெய்தால்
ஆடையாக்கி
நிர்வாணம் மறைக்கும்!

இந்த ஜீவ ஊற்றே
எனது ஜீவிதத்தைப்
பரிமளிக்க வைக்கும்
இதன் உதவி
மிக மிகத் தேவை
என் ஊனுக்குள்
வீரியம் ஊற!

ஆம்
எனது காலைகளை
இதன்
கிரணங்களே தீர்மானிக்கும்!

3203D

 

# வாழ்க்கை நிஜம்



"வாழ்க்கை பொய்யடா
உடம்போ
காற்றடைத்த பையடா"
இப்படிக் கூறுபவனின்
மூளையைச் சலவை செய்!

சுயநலவாதியே
வாழ்க்கையைப்
பொய்யென்று சொல்வான்!

சூரியன் நிஜம்
நிலவு நிஜம்
காற்று நிஜம்
கடல் நிஜம்
ஆம்
இங்கே
வாழ்க்கையும் நிஜம்!

உள்ளங்கையில்
ஊற்றிவைத்த தேன்போல்
வாழ்க்கை
உனக்கு வாய்த்திருக்கின்றது;
அருந்தி அருந்தி
ஆனந்தம் சுவை!

பொய்யென்று
ஆதி மனிதன்
வாழ்க்கையை
நினைத்திருந்தால்
சூனியமாய் அல்லவோ
சுற்றிக்கொண்டிருக்கும்
இன்றைய பூமி!

உன்னை
ஆகாரமாய்ப் புசிப்பதற்கே
இந்த
வேதாந்த வாய்கள்!

நாளைக்கு நேரப்போகும்
மரணத்திற்காக
இன்றைக்கே எவனும்
சவப்பெட்டி செய்வதில்லை!

தனது தோட்டத்தில்
பூமரக் கன்று
நட்டுக்கொண்டே
வாழ்க்கையைப்
பொய்யென்று பேசுபவன்
பொய்யனென்று புகல்!

பட்டு வஸ்த்திரத்தால்
தனது மேனியை
அலங்கரித்துக் கொள்பவனா
உனக்கு நிர்வாண மந்திரம்
உபதேசிப்பது!

சிரம் பொய் என்பவனுக்கு
மகுடம் எதற்கு?
மோதிரங்கள்
செய்வது ஏனென்று

விரல்கள்பொய்
என்பவனிடம்
என்றேனும் கேட்டதுண்டா?
பொய்யென்றா
வாழ்க்கையைப் புகலுகிறாய்
அப்படியானால்
பஞ்ச பூதங்களையே
பரிகாசம் செய்கிறாய்
ஐம்புலன்களை
அவமானப் படுத்துகிறாய்!

வாழ்க்கை நிஜம்.
இதைத்தானே
கடிகாரத்தின் மணியோசை
கணந்தோறும் உச்சரிக்கிறது!

எண்ணெய் ஊற்றித்
திரியைத்
தூண்டிக் கொண்டே
ஒளி பொய்யென்று
உரைக்கலாமா?

கண்ணீர்
சுரக்கின்றதே என்பதற்காக
கண்களைப் பழிக்காதே

அழகுகளும் உண்டு
அவைகளை ரசிக்க
தேடி நட
தரிசனம் கிடைக்கும்!

படுக்கப்
பாய்தேடும் உனக்கு
பாடையின் நினைவு கூடாது!

கடலைப்
பார்க்கும் போதெல்லாம்
முத்துகள் நினை
அலைகளின் மூர்க்கம்
உன்
ஆன்மாவைச் சாடாது!

சொட்டுச் சொட்டாய்
உனக்குள்
நம்பிக்கையை நனையவிடு
அவநம்பிக்கைகளை
உனது
விழிகளிலிருந்து அகற்று!

வெளிச்சத்தோடு
தோழமை வளர்

புன்னகை சிந்தி
புறப்பட்டு வந்தாலும்
இருட்டின்
நட்பை நிராகரி!

உன்
சிரிப்புகளைக்
கவர்ந்து போகவரும்
சோகத்தின் கால்கள்முறி!

வாழ்க்கை வரப்பிரசாதம்
அதை
எச்சில் இலையில்
பொட்டலம் கட்டிவிடாதே!



# மீண்டும் ஒரு பிறவி

மரணமுறும்
மரம் கூட
மேஜை நாற்காலியாய்
உயிர்த்தெழுகிறது.

மரணமுறும்
மாடுகூட
உன் பாதத்தில்
செருப்பாக
உயிர்த்தெழுகிறது!

மரணமுறும்
பாறைகூட
உன்கோவில்
சிலையாக
உயிர்த்தெழுகிறது!

மரணமுறும்
நதிகூட
உன்வீடுகட்ட
மணலாக
உயிர்த்தெழுகிறது!

மரணமுறும்
நெற்கதிரும்
உன்தட்டில்
உணவாக
உயிர்த்தெழுகிறது!

மரணமுறும்
பஞ்சுகூட
உன்மேனியில்
ஆடையாக அவதரிக்கிறது!

மரணமுறும்
மேகக்கூட்டம்
உன் தாகம் தணிக்கும்
தண்ணீராய்
உயிர்த்தெழுகிறது!

மரணமுறும் தீக்குச்சியும்
உன் விளக்கில்
சுடராக உயிர்த்தெழுகிறது!

மரணமுறும்
மனிதனே நீ
என்னவாகிறாய்?

எரித்தால்
சாம்பலாய் உதிர்கிறாய்;
புதைத்தால்
எலும்புச் சில்லுகளாகி
இறைந்து போகிறாய்!

ஆம்
உயர்திணையை விடவும்
அஃறிணை
உயர்ந்ததுதான்!

இருக்கும்போதே
பயன்படாதவன்
இறந்த பின்பா
பயன்படப் போகிறாய்?

நீ மனிதனாக
வாழும்போது
செய்திகள் கொஞ்சம்
சேமித்து வை.

மரணம் பேசும்
உன்னைக் கவிதையாக!

உனது
விரல்கள் வீணையை
மீட்டட்டும்;
இல்லையென்றால்
வியர்வையை
வழித்தெரியட்டும்.

பிற விழிகளைக்
காயம் செய்யும்
காரியம் செய்யவேண்டாம்!

நீ
எரிந்து கொண்டிருக்கும்
மெழுகுவர்த்தி.
உனது சுடர்
பிறரைச் சுடவல்ல
இருட்டை அழிக்க!

பழிக்கும் மொழியாகவா
நீ
பிரபஞ்சத்தின் உதடுகளில்?
வேண்டாம்
வாழ்த்துச் சொல்லாக
வடிவெடு!

நீ
ஓடிக்கொண்டிருக்கும்
நதி
உனது வெள்ளம்
வேர்கள் முறிக்க அல்ல
பயிர்கள் செழிக்க!

நீ
வளர்ந்து கொண்டிருக்கும்
மரம்
உனது கிளைகள்
சிலுவை செய்ய அல்ல
நிழல் கொடுக்க!

நீ
பேனா
உனது எழுத்துகள்
பொய்க்கணக்கு எழுதஅல்ல
வேதம் எழுத!

நீ
ஒலித்துக்கொண்டிருக்கும்
புல்லாங்குழல்
உனதுகீதங்கள்
கல்லறையில் ஒலிக்க அல்ல
சபைதோறும் இசைக்க!

உனது
பார்வைகளில்
பனித்துளிகள் வழியட்டும்
நீ
முள்ளானாலும்
கடிகார
முள்ளாய் இரு;
பிறகு பார்
உனது
மரணத்திற்குப் பின்னும்
பிறவி எடுப்பாய்.



உதடுகள் தைக்கப்பட்ட உண்மை
சிறைக் கம்பிகளுக்கு அப்பால்
நிம்மதியாய் உறங்கும் நீதி.





# இரண்டு ஊர்வலங்கள்

வானம் அதிர்ந்தது
வேட்டுச் சத்தங்களில்
கொளுத்திவிட்ட
வர்ண மத்தாப்பூக்கள்
சூரிய முகத்தில்
கருப்படித்தன!

முன்னாள் அமைச்சர்
கோடிக்கணக்கில்
அரசாங்கப் பணம்
களவாடிய குற்றத்திற்கு
கைதாகி
ஜாமீனில் வெளிவருகிறார்
ஊர்வலமாய்!

இவர்கள்
சிறைக்கம்பிகளைப்
பெயர்த்து
தமது
சாளரங்களுக்கு
வலைப்பின்னிக்
கொள்கிறார்கள்.

இது என்ன
கன்னக்கோலுக்கு
நடைபெறும் ஆயுத பூஜையா?

வெளிச்சங்களைத்
தின்று கொழுக்கும்
இந்தக் காற்றுகளால்
குடிசைகளில்
அந்தகார அஜீரணங்கள்!

அதெப்படி முடிகிறது
இவர்களால்
முகத்தில் துப்பிய
எச்சிலையும்
பன்னீர்த்துளியென்றுசொல்ல!

பணம் தின்னும்
இந்தக்
கழுகுகளின் சிறகுகளில்
எரிந்துபோன
வயிறுகளின் சாம்பல் கறை!

நமது பூமியில்தான்
அமிலங்களைத்
தீர்த்தமாய்
அங்கீகரிக்கும் மௌடீகம்!

ஏழைகளின்
இருதயம் கிழிக்கும்
அவமான முள்
அரசியல்வாதிகளின்
கைகளில்
தராசு முள்ளாகிவிடுகிறது!

சந்தனமென்று
வாக்குப்பெட்டிகளே
முடிவு செய்வதால்
இந்த அழுக்குகள்
சட்டமன்றத்தில் அமர்கின்றன
சோப்புக் கட்டிகளை
வெளியேற்றி விட்டு!

அதோ
புன்னகை மாறாத
பொய் முகத்தோடு
மாஜி அமைச்சர்
ஊர்வலம் போகிறார்...

இன்னொரு ஊர்வலம்
இது
ஏழைகளின் கண்ணீர்
ஊர்வலம்

சாகக் கிடந்த
பிள்ளைக்கு மருந்து வாங்க
நூறு ரூபாய் திருடியவன்
கைதாகி
சிறையில் அடைத்தபோது
மானம் போனதென்று
மரணம்
தழுவிக்கொண்டானாம்.

நான்கு பேர்
சுமந்த பாடையில்
ஒரு
நாணயத்தின் சவம்!

ஏழைக்குடும்பப் பாத்திரத்தில்
இப்படியொரு
பொத்தலா விழவேண்டும்!
ஓர்
அடுப்பு விறகு
அணைக்கப்பட்டு விட்டது.

கடைவீதியில்
தர்ம தேவதையைப்
பார்த்தேன்
"என்ன
வாங்க வந்தாய்?" என்றேன்.
"ஒரு
மானஸ்தன் பிணத்திற்கு
மலர் வளையமும்
மாஜி மந்திரி
தோளுக்கு சால்வையும்
வாங்கத்தான்" என்றது!

பொன்விழாக் கொண்டாடும்
சுதந்திர தேவி
இந்தியப் பெண் உடம்பில்
வியாபித்திருக்கும்

வியாதிக்கு
எப்போது
மருந்து
போடப்போகிறாளோ?

பாடையில்
கருகும் ஊதுவத்தியாய்
செத்தவன் மனைவி
சாலையில்...

கொளுத்தி வைத்த
குத்துவிளக்காய்
மாஜி மந்திரியின்
மனைவி வீட்டுவாசலில்!

ஓர் அபலையின்
குங்குமத்தை
மிதித்துக்கொண்டே
இரண்டு ஊர்வலங்களைக்
கடந்து வந்த
இந்திய ஜனநாயகம்
மாஜி மந்திரியின்
மனைவி பக்கத்தில்
நின்று கொண்டது
ரோஜா மாலையோடு!



பலசாலிகள்தான் நீங்கள்
அவர்களையும் வாழவிடுங்கள் கொக்குகளே
மீன் குஞ்சுகள்!





# படிக்காதீர்கள்

படிக்காதீர்கள்
அதிகம் படிக்காதீர்கள்!

ஆழமான படிப்பு
வாழ்க்கைக்கு நம்மை
அந்நியமாக்கும்!

படிப்பு
அர்த்தங்களை விடவும்
அர்த்தமின்மைகளையே
அதிகம் போதிக்கும்!

படிக்கப் படிக்க
உனக்குள்
ஞானம் நிரம்பாது
அறியாமையே வெளிப்படும்!

சில நேரங்களில்
பாமரத்தனமும் வரம்.
பலநேரங்களில்
பகுத்தறிவும் சாபம்!

என்னைக் கேட்டால்
பகுத்தறிவு நிர்மாணிக்கும்
நரகத்தைவிட
பேதமை உருவாக்கும்
சொர்க்கம் சிறப்பென்பேன்!

புத்தகம் படித்து
அறிஞனாகலாம்
வாழ்க்கையைப்
படித்தால்தான்
மனிதனாகலாம்!

அமுதமென்று பருகுவதே
நஞ்சாகி உயிர்க்கொல்லும்.

இந்தக் கற்கள்
எறியஎறிய மனக்குளத்தில்
சிதறிப்போவது
நாம்தானே!

வாழ்க்கைப்
புல்லாங்குழலுக்குப்

பொத்தல்கள் ஐம்புலன்கள்.
படிப்போ
ஒட்டையென்று அவைகளை
அடைக்க உபதேசிக்கும்!

இந்தக்
கோடை நிரந்தரமெனில்
மூளை நந்தவனம்
முற்றும் பாலையாகும்!

தமது
மூளை பலத்தால்
உலகத்தின் முகத்தில்
கற்றறிந்த மேதாவிகளே
கரிபூசுகிறார்கள்!

அச்சு எழுத்துகளால்
ஆன்மாக்களை
வெறுப்பதே இல்லை!

முடிவில் இந்தப் பாதை
விரக்தி வாசலுக்கே
இட்டுச் செல்லும்!

அரண் என்று
கட்டிக்கொண்டே போனால்
இந்த மதில்களை
இறுதியில்
நாம் இருப்பது சிறையாகும்!

கல்லாமை
மட்டும் அல்ல
அதிகம் கற்பதும்
நம்மை முட்டாளாக்கும்!

இந்த மழை
அளவோடு பொழிய
வேண்டும்.
இல்லாமற் போனால்
வெள்ளம்
அடித்துச் செல்லும்
விபத்தும் நேரலாம்!

தற்காப்புக் கருதி
சேகரிக்கும் ஆயுதங்கள்
இவை
நீயே ஒருநாள்
தற்கொலை
செய்வதும் நேரலாம்
இவைகளால்!

நமது பரிணாமம்
கலாசாலை வகுப்புகளிலா
ஒப்பனை செய்து
கொள்கிறது?
இல்லையே...
அது
மானுடப் பூவனத்தில்
மகரந்தப் பூச்சூடுகிறது!

கற்றவன் இதயத்தில்
கழுகுகள்
கூடுகட்டும் போது
பேதையன் நெஞ்சில்
மனித நேயம்
பூப்பதுண்டு!

முத்துகள் சேகரிக்க
இந்த

சமுத்திரம் அவசியம்தான்;
தாகம் தணிவதற்கு
நாம்
என்ன செய்யப் போகிறோம்?

தேன் சிந்துமென்று
காகிதப் பூக்களை அல்லவா
கொய்து
கொண்டிருக்கிறோம்!

அளவோடு எரியவிடு
இந்த அடுப்பை;
அப்போதுதான் நீ
பதமாகச் சமைக்கப்படுவாய்!

அறியாமை
எத்தனை சுகமானது!
அறிந்தமை
எத்தனைக்
கொடுமையானது!
வாழ்க்கையை விட்டு
மெல்லமெல்ல
உதிர்வதற்கு உத்தேசமா
அப்படியானால் அதிகம்படி!

வாழ்க்கை
வசப்படுவது
ரசிகனுக்குத்தான்
அறிஞனுக்கல்ல.



காவல் நிலையத்தில்
காயங்களோடு விநாயகர் முருகன்
நீதிமன்றத்தில் ஞானப்பழம்!





# நாங்கள் மனிதர்கள்

போகட்டும்
பூக்களே!
எங்களை மன்னித்து
விடுங்கள்
நாங்கள் மனிதர்கள்!

வண்ண வண்ணமாய்
வேறுபட்டாலும்
தேன்சுவையில் ஒன்றாய்
நீங்கள்!

கைநிறைய
வேதப் புத்தகங்கள்
மனம் நிறைய
வேற்றுமைகள் எங்களுக்கு!

சிலந்தி வலைபின்னும்
பரண்களில் பண்பாடுகள்;
நீதிபோதனை செய்ய
பாதை ஓரங்களில்
பிச்சைப் பாத்திரங்களுடன்
நாங்கள்

குயில்கறி விருந்து
சாப்பிட்ட குதூகலத்தோடு
ரயில் ஏறுவோம்
தியாகராஜ ஆராதனைக்கு!

போகட்டும்
பூக்களே! எங்களை
மன்னித்து விடுங்கள்
நாங்கள் மனிதர்கள்!

சூரியக்
கதிர்களை அணைக்க
கங்கைகளை வெட்டிக்
கொண்டே
அகல்விளக்கு
எண்ணெய்க்காக
ஆன்மாவைக் கொல்பவர்கள்.

எங்கள்
கிளைகளில் பூத்தேடும்

3203D

வண்ணத்துப் பூச்சிகள்
ஆயுள் முடிகின்றன
விஷத் தெளிப்புகளில்;

நாங்களோ
புதிய புதிய
பூச்செடிகள் வாங்க
பண்ணைகளுக்குப்
பயணம் போவோம்!

எங்கள்
தோட்டத்தில்
விஷக்கனி பழுக்காதா
என்று
வேள்விகள் புரிந்துவிட்டு
பிரபஞ்ச
முற்றத்தில் நின்று
கருணா உபதேசம்
பொழிவோம்!

போகட்டும்
பூக்களே!
எங்களை
மன்னித்து விடுங்கள்
நாங்கள் மனிதர்கள்.

சத்தியம்
எரிந்த நெருப்பெடுத்து
அடுப்பு மூட்டுவோம்
நீதிக்குப் பசிக்கிறதாம்
ஆகாரம் சமைக்க!

பிணங்களின்
கூந்தல் அலங்கரிக்க
நாங்கள்
வானவில்லையும்
பெயர்த்தெடுப்போம்.

ஆடைகளோடு சேர்த்து
போலித் தனங்களையும்
அணிந்து
நிஜங்கள் குறித்த
ஆராய்ச்சியில் நேரம்
கழிப்போம்!

கனவுகள்
வந்து அமரும்
இமைகளில் தீமூட்டிவிட்டு
அழகின்
ஆராதனைக்குக்
கற்பூரம் வாங்க
கடைவீதி போவோம்!

போகட்டும்
பூங்களே!
எங்களை
மன்னித்து விடுங்கள்
நாங்கள் மனிதர்கள்!

எமது
தெய்வங்களுக்கு
அபிஷேகம் செய்ய
அடுத்தவன் ரத்தம் தேடும்
நாங்கள்

புத்தன்
சிலைமீது எச்சமிடும்

காக்கை விரட்ட
கல்லெறிவோம்.

அழுது புலம்பும்
மனித நேசத்தின்
முகம் துடைத்துவிட்டு
விரோதத்தின்
வாசல் நுழைவோம்
பிறந்தநாள் வாழ்த்துக் கூற!

துரோகத்தின்
பாதங்களுக்குச்
செருப்பு வேண்டுமாம்...
நம்பிக்கையின்
சிறகுகளைக்
கத்தரிக்கிறோம்!

பல
கண்களில் குடியிருக்கக்
கண்ணீரை நிர்பந்தம் செய்து
உதடுகள் தேடி
அலையும் சிரிப்புகளுக்குத்
தவறான விலாசம் தருவோம்!

நாங்கள்
போதனைப் புத்திரர்கள்
செயல்களுக்கு அந்நியர்கள்

போகட்டும்
பூக்களே!
எங்களை
மன்னித்து விடுங்கள்
நாங்கள் மனிதர்கள்!



ஏகலைவன் தொடுத்த அம்பில்
அறுந்து வீழ்ந்தது
துரோணரின் கட்டைவிரல்!





# பொம்மைகள்

இன்னுமா... இன்னுமா
பொம்மை விளையாட்டு!

அறிவை
ஆகாரமாய் உண்டுமுடித்துப்
பொம்மைகள்
துப்பும் எலும்புகளில்
விரோதம்
விஸ்வரூபம் எடுக்கிறது!

இவைகளுக்காய்
நிர்மாணம் செய்த
சன்னதி இருளில்
கசங்கும் பூக்களோடு
மானுடமும் நசுங்கிப்
போகிறதே!

இந்தப்
பொம்மைகள் துதிபாட
மனிதன் எழுதிய
மந்திரச் சுவடிகளின்
எழுத்துக்கள்
தோட்டாக்களாய் மாறி
உயிர்களைத் துளைத்தன!

கீதை
ஒரு
இந்துவை உருவாக்குகிறது

பைபிள்
ஒரு கிறிஸ்தவனை
உருவாக்குகிறது

குரான்
ஒரு
முஸ்லீமை உருவாக்குகிறது

இந்த
மூன்றும் சேர்ந்து
மனிதனை உருவாக்க
எப்போது முயற்சிப்பது?

பொம்மைகள்
ஏறிப் புறப்பட்ட
ரதச் சக்கரங்களில்
ரணம்பட்டுச் சிநேகிதம்
ரத்தம் சிந்துகிறது!

பொம்மைகள் கண்டு
அரசாங்கமும் அலறும்!
வாக்குப்பெட்டிகள்
கர்ப்பம் தரிக்கும்
பொம்மைகளைப்
புணர்ந்து புணர்ந்து!

நீதி போதனை
செய்வதாய்க் கிளம்பிய
பொம்மைகளின்
பாதையெங்கும்
நீசங்களின் பிரசவம்!

இந்த வெளிச்சங்களும்
தவறு செய்கின்றன
மௌடீக நிழல் விரித்து!

ஒவ்வொரு மனிதனுக்கும்
பொய்முகம் பொருத்தி
பூரிப்புக் கொள்ளும்
பொம்மைகளின்
அரூப விரல்கள்.

மானுடத்தின்
நெஞ்சக் குழியில்
நஞ்சுத் தூவும்!

சிதையில் கிடத்தி
தேசத்தின் மேனிக்குத்
தீமூட்டுவதில்தான்
எத்தனை மகிழ்ச்சி
இந்தப் பொம்மைகளுக்கு!

பிறைகளாய்ச்
சிதைக்கப் பட்டன
பௌர்ணமிகள்

சிலுவைமரம் செய்ய
வேரோடு பலமரங்கள்
வெட்டி வீழ்த்தப்பட்டன.

கருவிகளுக்கான இரும்பு
ஆயுதங்களாய்
அவதாரம் பூண்டன;

ராமனென்றும்
ஏசுவென்றும்
நபியென்றும்
வேடம் புனையும்
பொம்மைகளுக்காக!

ஒரு
விடியலுக்கான
அருணோதயக் கிரணங்கள்
பொம்மைகளின் கருவறையில்
சபிக்கப்பட்ட அகல்களாய்!

ரத்த கங்கையில்
புனலாடிப் புளகமுறும்
இந்தப்
பொம்மைகள் தரிசனத்தில்
பாசன நதிகளும்
பயந்து வறண்டன!

அடடா என்ன பக்தி
தான்வெயிலில் கருகினாலும்
பொம்மைகளுக்குக்
குடைபிடிக்கும் இந்தியன்!

பொம்மைகளுக்குப்
பாலாபிஷேகம் செய்ய
வேண்டுமாம்
பசியில் கதறும்
குழந்தையைப் புறம்தள்ளி
மனைவியின்
மார்புகளில் பால்கறக்கிறான்
பாரதப் புத்திரன்!

பொம்மைகளின் நிர்வாணம்
பொறுக்காதாம் இவனுக்கு
அவைகளுக்கு
ஆடை கட்டிவிட்டு
இவன்
நிர்வாணமாய் நிற்கிறான்!

தேசத்தின்
சகல திசைகளிலும்
பொம்மைகளின் ஆக்ரமிப்பு!

விஞ்ஞானச்
சிறகுகள் பொருத்தி
வேற்று கிரகங்களின்
வாசல் நுழையும் மனிதன்
பொம்மைகளுக்கு முன்னே
பலிபீட ஆடாய்....

ஆம்
இப்போது தேவை
ஒருபுதிய மனிதன்;
இந்தப் பொம்மைகளிடமிருந்து
மானுடத்தை மீட்க!



தலைமீது கங்கை சுமந்த
பரமசிவன் தாகம் தணிந்தார்
கொக்கோ கோலா பருகி!





# கிளைகள்

ஆகாயத்தையே
அபகரிக்கும் வெறியில்
உச்சி நோக்கி
நீளும் கிளைகள்!

வானவில்லில்
வித்தியாசங்கள்
அழகாய் இருக்கின்றன;
கிளைகளின் வித்தியாசங்கள்
கிளர்ச்சிகளாய்
வெடிக்கின்றன!

கிளைகளுக்கு
முளைத்த பற்கள்
தின்பதை விடவும்
கடிப்பதே அதிகம்!

மேகத்தைப் பிழிந்து
மழைபொழிய வைக்காமல்
நிலாக்களைப் பெயர்ப்பதில்
நேரம்போக்கும் கிளைகள்!

இந்தக்
கிளைகளின் இலைகள்
பனித்துளிகளுக்குப் பதிலாக
ரத்தம் சிந்தும்!

பாட
மேடை தேடும்
குயில்களை விரட்டிவிட்டு
ஆயுதப் பறவைகள்
கூடுகட்ட
அனுமதி வழங்கும்!

இளைப்பார நிழல்தேடும்
மானுடத்தைக்
கிள்ளிக் கிள்ளிக்
காயம் செய்யும் கிளைகள்!

நாதஸ்வரமாகி
நாதம் பொழியும்

கலப்பை ஆகி
கழனி உழும்

பூப்பூத்துப்
பூமியை அலங்கரிக்கும்

இப்படித்தான்
கனாக்கள் கண்டோம்
எல்லாம் எரிந்து போயின!

சமரச
போதனைகள் செய்ய
கிளைகள் கூடிய சபைகளில்
விரோதம்தான்
விளக்கவுரை நிகழ்த்தும்!

ஒவ்வொரு கிளையும்
ஒன்றோடு ஒன்று மோதி
தீப்பிடித்து
திசைகளைச் சுடும்!

இவைகளில் தொங்குவது
தேன்கூடுகள் அல்ல
பாம்புகள்!

பூமியின்
அசுரக் கைகளாய்
நீளும் இவைகளின் பிடியில்
மனித நேயத்தின்
குரல்வளை!

சகோதரத்துவம்
மயானம் போவது

கிளைகள்
செய்த பாடையில்தான்!

கொழுகொம்பாய்
நிற்கும் என எதிர்பார்த்த
கிளைகள்
கொடிக்கம்பங்களாய்
ஆகிவிட்டன!

ஏணிகள் ஆகலாம்
ஏனோ இவைகள்
பிரம்புகளாய் இருக்கவே
பிரியப்படுகின்றன!

கிழிந்து போகின்றன;
உயரத்தில்
பறக்கும் கற்றாடிகளும்
இவைகளில் சிக்குண்டு!

தூண்டு கோலாய்
விறகாய்
ஒட்டடைக் கொம்பாய்
மாறாமல்
மானுடத்தைக்
கூறுபோடும்
கிளைகள் மீது
கோடரிகள் விழ்ந்தாலும்
குற்றம் இல்லை!



# மன்னித்து விடுங்கள்

ஓ... கிராமத்து மனிதர்களே
எங்களை
மன்னித்து விடுங்கள்!

உங்கள்
கண்களைப் பறித்துத்தான்
நாங்கள்
கலர்கலராய்
தொலைக்காட்சி
ரசிக்கிறோம்!

உங்கள்
குடிசைக்கு மேலே
காணாமல் போன கூரைகள்
எங்கள்
நகரத்து வீடுகளில்
ஆண்டனாக் கிரீடங்களாய்!

அத்தனை
ஐந்தாண்டுத் திட்டங்களும்
பட்டினத்துக் கிளைகளில்
பூக்களாய்ப்
பூத்துப் போனதால்
உங்கள்
கிராமத்துக்
கொல்லை மேடுகளில்
கருவேல முட்காடுகள்!

நீங்கள்
நிர்வாணமாய்
நிற்பது நிஜம்தான்
என்ன செய்வது
உங்கள்
ஆடையை அபகரித்துத்தானே
எமது
வீட்டுச் சாளரங்களுக்கு
திரைகள் தைக்கிறோம்!

வியர்வைத் துளிகள்
உங்கள்
தேகத்தில் மட்டும்தானா?
பட்டினத்துக்காரன்

ஏந்தும்
பிராந்திக் கிளாசுக்கும்
வியர்க்கும்

உங்கள்
வயலுக்குப் பாய வேண்டிய
ஓடை ஒன்று
எங்கள்
குளியல் அறைகளில்
நிரம்பி வழிகிறது!

பூசிக் குளிக்க
ஒரு
மஞ்சள் துண்டுக்கே
உங்கள்
மனைவியர்கள் ஏங்கும்போது
நகரத்துப் பெண்கள்
சந்தனக் குளியலில்
சந்தோஷம் காண்பர்!

குட்டையில்
குளித்துக் கரையேறிய
கிராமத்துக்காரி
மாற்றுச் சேலையின்றி
மரத்தில் ஒதுங்கித்
தனது
ஒற்றைச் சேலையை
உலர்த்தும் போது

எங்கள்
பட்டினத்து மங்கையர்கள்
நாகரிகச் சேலைகள்
நேரத்திற்கு ஒன்றாய்
கட்டிக் கட்டி அவிழ்ப்பர்!

ஓ... கிராமத்துக்காரர்களே
எங்களை
மன்னித்து விடுங்கள்!

உங்கள்
தீப்பொறிகளைக் களவாடி
எங்கள்
பிள்ளைகளிடம் தந்தோம்
மத்தாப்புக்
கொளுத்தி மகிழ!

நீங்களோ
இருட்டில் தடுக்கி வீழும்
குழந்தைகளின்
கண்ணீர் துடைத்தபடி!

காட்பரீஸ் சாக்லெட்
கைகளில் திணித்து
எங்கள் குழந்தைகளை
ஆங்கிலப் பள்ளிகளுக்கு
அனுப்பி வைக்கும்போது

ஒட்டைப் பலகையோடும்
ஒட்டுப் போட்ட
சட்டையோடும்
உங்கள் பிள்ளைகளைப்
பள்ளிக்கு அனுப்புகிறீர்கள்
படிப்பதற்கு அல்ல
மதிய உணவிற்காக!

உங்களிடமிருந்து
அபகரிக்கப்பட்ட
வசந்த காலங்களால்

எங்கள்
நந்தவனங்களில்
நாள்தோறும் குயில் இசை!

கிராமத்துக்காரர்களே!
உங்கள்
கனவுகளைப்
பிழிந்து பிழிந்து
பட்டினத்துக் கதவுகளுக்கு
வண்ணம் பூசுகிறோம்.

தெரியுமா உங்களுக்கு
நீங்கள்
மூட்டிய அடுப்பில்
நீங்களே
விறகாய் எரிவது...
சமையல் மட்டும்
எங்கள் தட்டுகளில்!

கிராமத்தில்
தொலைந்து போவதெல்லாம்
நகரத்தில்
அகப்படுகின்றன!

கிராமங்கள்
முத்துக்குளிப்பது
நகரத்துக்
காது தோடுகளில்
முத்துக்கள் பதிக்கவா?

நகரத்து
வீதிகளைப் பெருக்கும்
அரசாங்க எந்திரங்கள்
கிராமத்துத் தெருக்களில்
குப்பை போடுகின்றன!

உங்களைச் சுரண்டும்
நகரத்தின்
சூதுக் கரங்கள்
ஓய்வு பெறுவதுதான்
எப்போது?

கிராமத்துக்காரர்களே!
நீங்கள்
கோப்படும் போதுதான்!

எப்போது
நீங்கள்
கோப்படப் போகிறீர்கள்?

மாட்டீர்கள்
நீங்கள்
கோபப்படவே மாட்டீர்கள்

உங்கள்
உணர்வுகளை
மழுங்கடிக்கத்தான்
அரசியல்வாதிகளின்
கைவசம் பொய்கள்!

மதவாதிகளின்
கைவசம் கடவுள்கள்!
சினிமாக்காரன்
கைவசம் கட்அவுட்கள்!

நாங்கள்
மிச்சமாய் எறிவதிலேயே
மகிழ்ந்து போவதால்தான்
உங்கள் பங்குகளையும்
நீங்கள்
பறிகொடுக்கிறீர்கள்!

நகரத்துக்கும்
கிராமத்துக்கும்
நடுவே இடைவெளி
பண்பாட்டின்
கல்லறைகளாய்
நகரங்கள்

கலாசாரத்தின்
மிச்சங்களாய் கிராமங்கள்

இன்னும்கூட
இங்கே
வேர்கள் முறியாத மரபுகள்
வேலிகள்
சிதையாத வாழ்க்கைகள்!

ஆம்
உண்மையில் உங்களுக்கு
நான் அந்நியனே!

ஊர் நடுவே
குந்தியிருக்கும்
ஐயனார் சிலையின்
விஸ்வரூபம்
உங்கள்
குடிசைகளில் குடியிருக்கும்
வறுமையின் குறியீடா?

வற்றிப்போன
குளத்தின்
சிதைந்துபோன
படித்துறைகளாய்
உங்கள்
கிராமத்து ஜனங்களின்
குலைந்துவிட்ட ஆசைகள்!

எண்ணெய்ப் பிசுக்கேறிய
அம்மன் சிலை முன்னே
சூலத்தில்
குத்தி வைத்த
எலுமிச்சம் பழங்களாய்
உங்கள்
கிராமத்து வாழ்க்கைகள்!

நாகரிகமாய்
நடந்து போகும்
என்னை
வாசலுக்கு ஓடிவந்து
ஓர்
அதிசயமாய்ப் பார்க்கும்
கிராமத்துக்காரர்களே
என்னை
மன்னித்து விடுங்கள்

உங்கள்
கிராமத்துப் புழுதிச்
சாலையில்
ஒரு
குற்றவாளியைப் போலத்தான்
நான் நடந்து போகிறேன்!





# வித்தியாசங்கள்

அது
ஒரு ரம்மியமான காலம்
வண்ணங்களால்
அலங்கரித்து மகிழ்ந்த
மன்மதப் பருவம்!

நிகழ்காலக் குதூகலத்தில்
எதிர்காலக் கனாக்களை
சுகமாக நிர்மாணித்து
வாழ்வில்
இனிமைகளைச் சேகரிக்கத்
துடித்த சௌந்தர்ய காலம்!

எத்தனை கற்பனைகள்
எத்தனை கோட்டைகள்
அத்தனையும்
வாலிப இதயத்தின்
வசீகரங்கள்

படித்த நாவல்கள்
பார்த்த சினிமாக்கள்
வாழ்க்கையை
வரைந்து காட்டிய
மனக்கோலங்கள்
காயாத ஈரநெஞ்சில்
பூத்துச் சிரித்த
மனோகர நினைவுகள்தாம்
எத்தனை!

யதார்த்தத்தின்
துக்கங்கள்தாம்
எத்தனை கொடூரம்!

நினைவுகளை விலகவிட்டு
வித்தியாசமாய் நிற்கும்
வாழ்க்கையின் நிஜரூபங்கள்

கனவுகளும், நிஜங்களும்
கைகோர்த்துக்
கொள்ளஇயலா
இருவேறு திசைகளா?

சோக வெளிச்சங்கள்
சூழ்ந்த கிடக்கும்
வாழ்க்கை வானில்
வாலிப கால
நினைவு நிலாக்கள்
பிரகாசிக்காமலா போகும்!

ஆர்ப்பாட்டமாய்
கிளம்பிய இளமையின்
ஆசை ஊர்வலம்
அதோ
பிரச்சினையின்
தடியடி பிரயோகத்தில்
தடம்மாறிப் போய்விட்டது!

கனவுகளின்
பற்றாக் குறையால்
கலங்கித் தவித்த
வாலிப வாழ்க்கைக்கும்,
பொருளாதாரப்
பற்றாக் குறையால்
துடிக்கும்
குடும்ப வாழ்க்கைக்கும்
இடையில்தான்
எவ்வளவு வித்தியாசம்!

வாலிபம்
ஜெயித்ததாய் யார்
சொன்னது?
இதோ
பொய்யென்று
வாழ்க்கை புகல்கிறதே!

நிலாவைப் பறிக்க
ஏணி கட்டிய மனசு
இப்போது
வாசல்படி ஏறவும்
வலிமை இழந்து போனது!

நிதர்சன
நெருப்பில் மூழ்கி மூழ்கி
வாழ்க்கைமுகம்
கறுத்துவிட்டது!

உண்மையின்
சுயரூப பிரமிப்பில்
மனக்கனவுகளுக்கு மிரட்சி.

ஆம்
கனவு வேறு
வாழ்க்கைவேறு.

ஒருவேளை
வாழ்வின் பரிமாணத்திற்கே
இந்த
வித்தியாசங்கள்தாம்
கர்ப்பப் பைகளோ!





# பொய்கள்

ஊடும்
பாவுமாய்
பொய்யும் மெய்யும்
பின்னிப் பின்னி
வாழ்க்கைத் துணி
நெய்யப்படுகிறது!

பொய் பேசாத
மனிதனைக் காட்டுங்கள்,
உங்களுக்குக்
கடவுளைநான் காட்டுகிறேன்!

பொய்யைப் புறம்தள்ளி
இங்கே
ஒரு வாழ்க்கை உண்டெனின்
பொய்யென்று உரை!

உயரே பறக்கும்
மனிதனைக் கவனி
சிறகுகளாய்
அவனுக்குப் பொய்கள்!

தவறு—
வள்ளுவனே
அங்கீகரித்த பொய்யை
நாம்
அவமதிப்பது!

உண்மையின்
மாடங்களை அலங்கரிக்க
நட்சத்திரங்களே
வெறுக்கும்போது
பொய்யின் மஞ்சத்தில்
விளக்காய் எரிய
நிலாவுக்கு விருப்பம்!

பத்தடி தூரம்
நடந்தாய் என்றால்
அதில்
பாதிதூரம் நீ நடக்க
பொய்யே பாதை போடும்!

நாம்
பொய்யை

வேட்டியாய்க் கட்டிக்கொண்டு
உண்மையைச்
சட்டையாய் அணிந்து
கொள்கிறோம்.

பொய்யை
ஏளனம் செய்யாதீர்கள்
நாளையே
அவை உங்களுக்கு
எஜமானனாய் ஆகலாம்!

நுரை
பாலின்பொய்
பதர்
கதிரின் பொய்
நிழல்
ஒளியின் பொய்!

பொய்களின்
சவக்குழி தோண்டும்
கடப்பாரை முனையில்
மானுட ரத்தம்!

பொய்களைத்
தின்றுதின்று
நீதிமன்றங்களும்
பத்திரிகைகளும்
கொழுத்துப் போயின!

இங்கே
பொய்யைப் பழிப்பது
உதடுகள் மட்டும்தான்,
ஆன்மாவோ
ஆலிங்கனம் செய்கிறது!

பொய்களுக்கு
நிறையவே தர்ம சிந்தை
அரசியல்வாதிகளுக்கு
அவைகள் இட்ட
பிச்சைதானே பதவிகள்.

எனது ஓட்டு
பட்டினி போடும்
உண்மைக்கல்ல
சோறுபோடும் பொய்க்கே!

பொய்யின்
ஜுவாலை பட்டு
ஞானத் தகனங்கள்

பொய்
மிச்சமாய் எறிந்ததை
உணவாய்த் தின்று
உயிர்வாழும் உண்மைகள்!

சராசரி மனிதனுக்கு
பொய்
ஆயுதம் மட்டுமல்ல
கருவியும் கூட!

இந்த
மந்திரக் குரல்கேட்டுப்
புல்லாங்குழல்களைப்
பறிகொடுக்கும்
மேய்ப்பன்களும் உண்டு!

இதன்
பாதங்களில் குலுங்கும்
சதங்கையின் ஓசையில்
கவிதை
கீதங்கள் பயிலும்!

பொய்களிடம்
இலக்கியங்கள் மன்றாடும்
தம்மை
ஒப்பனை செய்யும்படி !

நோய்ப் படுக்கையில்
கிடக்கும் வாழ்க்கைக்கு
சுவாசிக்க
இந்த ஆக்சிஜனும்
அவசியமாய் ஆகிறது?

பொய்யைப்
பாடத் திட்டத்தில்
சேர்க்கும்படி
பல்கலைக்கழகத்திற்குப்
பரிந்துரை செய்ய
கலைமகளே
புறப்பட்டுப் போனதாக
கடைசியாய்
ஒரு செய்தி !



கட்டுக் கட்டாய்க் கடையில்
விற்காத கீதைப் புத்தகங்கள்
கல்லாப் பெட்டியில் பரந்தாமன்!







# பூக்கள் வித்தியாசம் பார்ப்பதில்லை!

குவிந்து கிடக்கும்
உன் கரங்களுக்குள்
குந்தியிருக்கும்
ஆயுதத்தைத் தூக்கி எறி!

இது
சாந்தம் தவழும்
தெய்வ சன்னிதி

இங்கேயுமா
உன்
ரத்தப் பசிக்கு
ஆகாரத் தேடல்!

வேண்டாம்
வேண்டவே வேண்டாம்
பூக்களை
மிதித்துக் கொண்டு
பூஜைக்குப் போகும் புன்மை
வேண்டவே வேண்டாம்!

இருட்டில்
வழிகாட்டத்தான்
ஒவ்வொரு நட்சத்திரமும்;
உன்னைத்
திசைத்திருப்ப அல்ல!

தேசத்தின்
சேதம் மதங்களாலா?
அப்படியென்றால்
எதற்கிந்த மதங்கள்
இழிவென்று அகற்று!

பக்தர்களாய் மாறிப்
பகைவர்களாய் மடிவதை
விடவும்
மனிதர்களாய் நடந்து
நண்பர்களாய் வாழ்வதே
நன்று!

மக்கள்
மடிந்து கொண்டிருப்பது
இங்கே
இல்லாத ஒன்றுக்காக!

நமக்குக்
கிடைத்த தண்ணீரால்
பிணங்களைக் கழுவுகிறோம்!

நமது நெருப்புகளைச்
சிதைத்தீயாய் மாற்றுகிறோம்!

இதுவா அறிவு?

அறுவடை அரிசியைப்
பொங்கித் தின்னாமல்
பிணங்களைத் தேடுகிறோமே
வாய்க்கரிசி போட...
இதுவா அறிவு?

முடிந்தால்
உன்கற்பூர ஜோதியால்
ஓர்
அகல்விளக்கு ஏற்று;
குடிசைக்குத் தீ வைக்கும்
கொடுமை மட்டும்
வேண்டாம்!

நீ வேறு
நான்வேறு என்ற
வேற்றுமையோடா
காற்று
நம்
வாசல் நுழைகிறது?

உனக்கு
ஒருவிதமாகவும்
எனக்கு
ஒருவிதமாகவும்
வித்தியாசம் பார்த்துப்
பூக்கள்
வாசம் வீசுவதில்லை!

மனிதர்கள்நாம் என்றுதானே
நிலாக்கூட
நம்மீது
சீதளக் கதிர்களைச்
செலவழிக்கிறது!

அதோ
அந்தக்குயில்
உனக்கு வேறாகவும்
எனக்கு வேறாகவுமா
பாடல்கள் இசைக்கிறது?
இல்லையே!

அஃறிணை யாவும்
நம்மை
மனிதர்களாய்
அங்கீகரிக்கும்போது
மதவாதிகளாகி
நமக்குள்நாம்
பின்னப்பட்டுப் போவது
பிழையென்று உணர்!

ஒவ்வொரு
துளி ரத்தமும்
நமக்குள் சிவப்புதான்.

உனது கண்களிலும்
எனது கண்களிலும்
கறுப்பும் வெளுப்பும்தான்!

நீ
கோவில் நுழைகிறாய்
நான்
மசூதி போகிறேன்
அவன்
குருத்துவாராவில்
கும்பிடுகிறான்.

நமது
ஆடைகள்தான் வித்தியாசம்
அடிப்படை நூல்ஒன்று
தானே?

மானுடத்தின் முகத்தில்
எச்சில் துப்ப
மதங்களை அனுமதித்தால்
தேசத்தின் மேனியில்
காயங்கள்
ரத்தம் துப்பும்!

மதங்கள்
கூந்தலில் பூக்கள் போல,
மானுட நேசமோ
மூக்கின் சுவாசம்!

என்ன நியாயம்?
நீ
நுழையும்
வழிபாட்டு ஸ்தலத்தின்
வாசல் படிகள்
ரத்தத்தால் நனைவது?



வேலியில்லாமல் பரந்த வானம்
பறக்கத் தவிக்கும் மனசு
சிறகுகள் இல்லாத நான்!



# இன்னும் நான் பூக்கவில்லை



கங்கையும் காவிரியும்
வாசலில் பாய்கின்றன
இன்னும்நான் நிரம்பவில்லை!

ஆசைகள்
வெட்டிய குழிகளில்
வீழ்ந்து வீழ்ந்து
காயப்படும் இதயம்
மருந்து தேடாமல்
அடுத்த குழியையே
தேடுகிறது!

ஒரு கூட்டுக்குள்
அடங்கி இராமல்
ஆகாயம் பறிக்கும் வெறியில்
மனப்பறவை
திசைகளில் யுத்தம்
செய்கிறது!

தென்றலுக்காக
நடத்தும் யாகத்தீயைப்
புயல்வந்து
அணைத்துவிட்டுப்
போகிறது!

ஆயிரம் நாவுகளோடு
ஆதிசேச தாகங்கள்
என்னையே பருகுகின்றன!

ஞானம் போதிக்கும்
தத்துவ உதடுகள் புறம்தள்ளி
போதை தளும்பும்
கனவுகளின் அதரங்கள்
தேடுகிறேன்!

இந்தப் பாடலுக்காக
எத்தனை ராகங்கள்
பூசைகள் செய்கின்றனவோ!

இந்த
நதியின் வருகைக்காக
எத்தனையோ வயல்களின்
நோன்புகள்

நான்
என்னவாகப் போகிறேன்...
அதோ
காலத்தைக் குடிக்கும்
அசுர உதடுகளாய்
கடிகாரத்தில் நகரும் முட்கள்
நான்
கரைந்து கொண்டிருப்பதாய்
நாள்தோறும் கூவுகின்றன!

வசந்தங்கள்
வந்து போயின நந்தவனத்தில்
இன்னும்நான் பூக்கவில்லை!

முத்துக்களுக்காக
வெட்டிய சமுத்திரத்தில்
கிருமிகளின் கூட்டம்!
சிகரெட்டுகள்தானா
கிடைக்க வேண்டும்
எனது
தீக்குச்சிகள் பற்ற வைக்க?

வாழ்க்கை
விளிம்புகள் அற்ற
பாத்திரமாய்
இதில் நான்
எப்படிச் சமைக்கப்
போகிறேன்?

ஒருநூறு
நட்சத்திரங்கள் தீபங்களாய்
விழிகளில் எரிந்தாலும்
இடறி விழுந்து
இரத்தம் சிந்துகிறேன்!

சித்திரங்கள்
தீட்டியதாய் எனக்குள்
செருக்கு,
என்னிடம் இருப்பதோ
வெறும் கோடுகள்!

கவிதைகள்
எழுதியதாய் எனக்குள்
கர்வம்
என்னிடம் இருப்பதோ
வெறும் எழுத்துக்கள்!

என்னைத் தின்னும்
ஆசைகளின் வாய் தைக்க
எப்போதோ
புத்தன் தந்த
ஊசிநூல் தேடி எடுத்தேன்
ஊசியிலே துரு:
நூலிலே சிக்கல்!

வாழ்க்கை மைதானத்தில்
தத்துவங்களுக்கும்
தேவைகளுக்கும்
நடைபெறும் பந்தயத்தில்
நான்என்ன கால்பந்தா?

காட்சிகளை
வைத்துக்கொண்டு
கண்கள் தேடுகிறேன்.

கீதங்களை
வைத்துக்கொண்டு
காதுகளுக்காக
அலைகிறேன்,
கிடைப்பதெல்லாம்
குருட்டுக் கண்கள்
செவிட்டுக் காதுகள்!

சூரிய சந்திரன்களை
தோரணமாய்க்
கட்டிவைத்தேன்
இன்னும்நான்
விடியவில்லை!



# அந்திகள் இல்லாத ஆயுள்

நீ
தந்த நிறங்களால்
அலங்காரம் பூண்ட
எனது வாழ்க்கைக்குக்
கவிதை விழா நடத்தியது!

மனதில்
நடந்துபோகும்
உன்
பாதச்சுவடுகளில்
கவிதையாகும் வார்த்தைகள்!

உனது
புன்னகைகளைக்
கொய்து கொய்து
எனக்குள்
வாசனை வளர்த்தேன்!

உனது
பார்வைகளைச்
சேகரித்துச் சேகரித்து
எனக்குள்
தீபங்கள் ஏற்றினேன்!

உனக்கு
மட்டுமே தெரிந்தது
எனது ஓசைகளை
ராகமாக்கும் ரசவாதம்!

நீ
அழகின் உதடுகளில்
புன்னகை!
கவிதையின் விரலில்
மோதிரம்!

உனது
மன்மத ரூபத்தின்
ஒவ்வொரு நளினத்திலும்
மலர்களின் நர்த்தனம்!

ஆகாயக் கனாக்களால்
எனது

சிறகுகள் விரிந்தபோதும்
தொடுவான விளிம்பில்
உனது முகமே
தீபஸ்தம்பமாய்ச் சுடரிட்டது!

ஒவ்வொரு
சொட்டிலும் நீயே
நிரம்பி வழிகிறாய்
என்தாகம் தணிய!

எனது
கனவுகளுக்கு
உனது தூரிகையே
கவிதைவண்ணம் பூசுகிறது!

உனக்குள்
மூழ்கி மூழ்கி
நான்
மீண்டும் வரும்போது
என்
கைநிறையக் கவிதைகள்!

உனது
பார்வைகளின்
சின்னச் சின்ன தீண்டலிலும்
எனக்குள்
நட்சத்திரக் குவியல்கள்!

நீ
கிள்ளுவதும்கூட
என்னைத் தொடுப்பதற்குத்
தானோ?
எனது
பிறவி நீட்டிய கரங்களில்
உனது அழகு
பரிசளித்த கவிதைச் சுரபி!

உன்னைப்
பருகிப் பருகி
ஆனந்திக்கும் ஆன்மாவுக்கு
தாகம் தணிவதில்லை

நிஜம்,
என்னை உச்சரிக்க
உதடுகள்
கிடைத்தது உன்னால்தான்
என்பது!

என்ன மாயம்
உன்விரல்கள் தொட்டதும்
இந்த நட்சத்திரம்
நிலாவாகி விட்டதே!

உன்
பூச்சூடலுக்காக
இத்தனைக் கவிதைகள்
எனது இதயத்தில்!

இந்த
பூவின் வாசம்
திசைகள் போக
தென்றலே நீதானே
சிறகுகள் தந்தாய்!

உனது
கிரணங்களில் நனைந்து
வெளிச்சமானேன் நான்!

எனது
ஆன்மப் பூவின் மகரந்தம்
உனது சிநேகிதம்!
ஆம்
எனது கற்பனைகள்

அரங்கேற
உனது சிநேகிதமே
ஒரு
சபாமண்டபம் கட்டியது!

இந்த
தீபம் ஒளிர
ஒருகோவில் சிருஷ்டித்தாய்!

இந்த
ரதம்ஓட
ஒரு
ராஜவீதி அமைத்தாய்!

உனது
மெல்லிய புன்னகை
என்
மனசுக்குள் ஏற்றிய
கவிதை தீபங்களால்
என்
ஆயுளுக்கு இனி
அந்திகள் கிடையாது!



உயரத்தில் கிடைக்காத பெருமை
கீழே இறங்குவதில் கிடைக்கும்
வயலில் பெய்த மழை





# அடிமைகள்

'மனிதன்
சுதந்திரமானவன்' என்று
சொன்னது யார்?

கூப்பிடுங்கள் அவனைக்
கன்னத்தில் அறையலாம்.

திசைகள் எட்டிலும்
அடிமைகள் திரள்!

எவனையும்
கூப்பிட்டு விசாரியுங்கள்
எதற்கேனும் அடிமையாய்
அவன் இருப்பதே சத்தியம்!

அறிவு
விடுதலை அளிக்காது
மனிதனை
அடிமையாக்குவதே
அறிவுதான்!

பொம்மைக்கு
அடிமையாகும் குழந்தை
வாலிபத்தில்
கட்டிலுக்கு அடிமையாகி

முதுமையில்
ஊன்றுகோலுக்கு
அடிமையாகி
இறுதியில்
பிணமாகிய பின்பும்
அவன்
பாடைக்கு
அடிமையாகிப் போகிறான்!

ஒன்றில்
விடுதலையாகி

பிறிதொன்றில்
அடிமையாய்ப் பிணைவதே
அனைவருக்கும் நியதி!

ஆசைகள்
மெல்ல மெல்ல
இவன்
சுதந்திரம் அபகரிக்கும்

தேவைகளோ
இவனைத் தேசமெங்கும்
அடிமையென்று
அறிவிப்புச் செய்யும்!

ஞானப் பிரக்ஞை
இல்லாதவனே
ஞாலத்தில்
சுதந்திரமானவன்!

அறிவு
விரல்களுக்கு மோதிரம்
போட்டு
கைகளில்
விலங்குப் பூட்டுகிறது!

யோசித்துப் பார்த்தால்
அடிமைகளாய்
இருப்பதில்தான்
அனைவருக்கும் ஆனந்தம்!

இயங்கிக் கொண்டிருக்கும்
மனிதனா?
அப்படியென்றால்
ஏதோ ஒன்றுக்கு

அடிமை நீ!
இந்த
மின்சாரம் இல்லையென்றால்
நீ
ஓடாத மின்விசிறி!

வாழ்க்கையை விட்டு
விலகிப் போனவனே
தன்னை
சுதந்திரன் என்று
சொல்லிக் கொள்வான்!

அடிமைகள்
ஆசீர்வதிக்கப்பட்டவர்கள்
ஏன் தெரியுமா
அவர்கள்தானே
வாழ்க்கையை
நேசிக்கிறார்கள்!

அரூபமான
அடிமை விலங்குகள்
இறுகி இறுகி
சோகம் சொட்டும்
ஆன்மாக்கள்;
இந்தச்
சோகம்கூட
உன்னை
மனிதனாகச்
சித்திரிக்கத்தான்!



# மனிதப் போலிகள்

ஒருவனுக்குள் ஒன்றா
ஒருநூறு மனிதர்கள்
எனக்குள் மட்டுமல்ல
எல்லோருக்குள்ளும்தான்!

கபடம்
போர்த்திய மனிதன்,
ஆடை போர்த்திய
மனிதனுக்குள்

அடடா
இந்தப் புன்னகை
விரிக்கும் திரைக்குப்
பின்னே
எத்தனைப் பொய்கள்!

"ஆன்மாவில் முளைக்கும்
அழுக்குகளை
அலங்கரிக்கவே
பொய்கள்
கண்டுபிடிக்கப்பட்டன"
இப்படித்தான்
எண்ணுகிறேன் நான்.
விழிகளில்தான்
நிலாச் சிரிக்கும்
உதடுகளில்தான்
தென்றல் உலாவரும்
இவர்களிடம்
கடலைத் தந்து பாருங்கள்
பாலையாய் மாறிப் போகும்!

தம்மை
ஞான நூல்களாய்
பிரகடனப் படுத்தும் இவர்கள்
பிரிக்கப் படும்போதுதான்
மஞ்சள் பத்திரிகை என்று
மற்றவருக்குத் தெரிகிறது!

இவர்கள் லட்சியம்
ஒரு தட்டுச் சோறு
அதற்காக
அடுத்தவன் வேட்டியையும்
அடகுவைக்கத் தயங்க
மாட்டார்கள்!

என்ன
அற்புதமாய் நடிக்கின்றன
இந்தக்
கோரைப்புற்கள்
நெற்கதிர்களாய்!

இவர்கள்
சில்லறையாய்த் தம்மைச்
செலவழிப்பதுங்கூட
மொத்தமாய்
அபகரிக்கத்தான்!

சிநேகிதம்
மானுட உதடுகளில்
மனிதநேய மந்திரம்

இவர்களுக்கோ
கடவுள்போல

அதைக்காட்டி தமது
உண்டியல் நிரப்ப!

சுயநலம்
சுபிட்சமாய் வளர
இந்த
மனிதப் போலிகளே
சரியான எரு!

ஏமாறதீர்கள்
கோவில் என்று;
கோவில் முகப்போடு
கட்டிவைத்த
கழிப்பறைகள் இவர்கள்
அடிமனசு முழுக்க அசுத்தம்!

'வெளிச்சம் தரத்தான்
இந்த
விளக்குகள் எரிகின்றன"
இப்படி நினைப்பதே தவறு;
இவைகள் எரிவதோ
சில விட்டில்களைச்
சாகடிக்கத்தான்!

இந்தப்
போலிப் பூக்கள் கவர்ச்சியில்
சில வண்டுகளுக்குச்
சிறகுகள் பறிபோகின்றன!

அடுத்தவர்
வியர்வை பருகியே
இந்த
நீரோடைகள்
தாகம் தணியும்!

இவர்களுக்குள்
புற்றுக் கட்டும்
பாம்புகளுக்கு
மகுடியும் இவர்களே!

புன்னகையும்
பேச்சும்தான்
இவர்களுக்குப்
போர்புரியும் ஆயுதங்கள்!

ஒரு
துறவியைப் போலத்
தத்துவங்கள் போதித்து
ஒரு
ஞானவான்போல
நேசங்கள் பரிமாறி
ஆன்மாவுக்குள்ளே
ஓர் அயோக்கியனாய்
இருக்க
எப்படி முடிகிறது
இவர்களால்?

ஓர்
அப்பாவி கிடைத்தால்
தமது
எச்சிலையும்
பன்னீரென விற்றுப்
பணம் சம்பாதிப்பார்கள்!

நட்பு
நமக்கு இமைகள்;
இவர்களுக்கோ
மென்று பசியாறும் பற்கள்!



# பூமிக்கு வராத வெளிச்சங்கள்

இடையில்
எமது வெளிச்சங்களைக்
களவாடிய
கரங்கள் யாருடையவை?

சூரிய சந்திரரின்
அன்றாட பவனி
ஆகாயத்தில்;
எங்கள்
முகங்களில் மட்டும்ஏன்
யுகாந்திர இருட்டு?

பார்வைகளுக்கு
விலங்கு மாட்டும்
இந்த
இருட்டினின்று மீளாமலேயே
எங்களுக்கு மரணம்!

என்ன இழிவு!

தூக்கம் கலைந்ததும்
தொலையும் கனவுகளாய்
எம்மை விட்டுக்
காணாமல் போன
ஒளிக்கிரணங்கள்

வெளிச்ச
வேள்வி புரியும்
விழிகளில் ரத்தப் பூக்கள்

இப்போது
விளக்குகளும்
எம்மைப் பரிகசிக்கின்றன!

வெளிச்சங்கள் தேடித்
தூது போகும்
எங்கள் பார்வைகள்
ராத்திரிகளால்
ரணம்பட்டுத் திரும்புகின்றன!

எங்கள்
பிரார்த்தனைகள்
ஒவ்வொன்றும்
இருட்டுக் ககனவெளியில்
பிணங்களாய் வீழ்கின்றன!

யாரோ
துப்பிய எச்சிலில்
எங்கள்
சூரிய சந்திரர்கள்
அணைந்து போயினரோ?

எங்கள்
கூரை மீது
கிரணப் பூக்கள்
உதிர்க்காமல்
எங்கேபோய் மறைந்தன
மலட்டுச்
சூரிய சந்திரர்கள்!

முகம் தெரியாத
கள்ளர்களின் ஆரத்தித்
தட்டுகளில்
எரிவது கற்பூரம் அல்ல
அபகரிக்கப்பட்ட
எங்கள் வெளிச்சங்கள்!

எங்கள்
வெளிச்சங்களைக்
களவாடும்... திருடரைக்
கைது செய்ய
இந்தியச் சட்டத்தில்
எந்தப் பிரிவும் இல்லையோ?

திசைகள்
புலப்படாத இருட்டில்
இன்னும்
எத்தனை யுகங்களுக்கு
எமது பயணமோ!

ரத்த நாளங்களில்
தூவிய சோக விதைகள்
ஆன்மாவில்
முட்களாய் முளைத்தன!

இருட்டே
நிரந்தரம் என்றதனால்
எமது
நந்தவனப் பூமரங்களில்
நித்திய இலையுதிர் காலம்!

எங்களை
முற்றுகை இடும் இருட்டு
பார்வைகளைப் பறித்து
மாலைகள் புனைகின்றன!

புயல்களின்
அதட்டல் கேட்டுக்
கொளுத்தும் அகல்களும்
கண்மூடிக் கொள்கின்றன!

பிழை என்ன செய்தன
எமது பிரதேசங்கள்?
வெளிச்சங்கள் நுழையாமல்
விலகிப் போவதற்கு!

எமது
கண்களுக்கு விதிக்கப்பட்டது
கல்லறை இருட்டுத்தானா?

நாங்கள் மட்டும் ஏன்
வெளிச்சங்களுக்கு
அந்நியமானோம்!

அண்ணாந்து பார்க்கும்
எங்கள் விழிகளுக்கு
நட்சத்திரங்களே
தரிசனம் தராதபோது
சூரிய சந்திரரா
சுடர்முகம் காட்டப்
போகின்றன?

எங்கள்
பூமிக்கு வராமல்
திசை மாறிய வெளிச்சங்கள்
எவருடைய வானத்தில்

வைகறையாய்ப் பூத்ததோ!
ஆம்
இந்த நீச இரவு
நீடிப்பது இழிவு!

இந்த
இரவைப் பருகிப் பருகி
ஆன்மா கசந்து போனது

இந்த
அந்தகார வனாந்திரத்தில்
அலைந்து அலைந்து
பிறவியும்
சோர்ந்து போய்விட்டது!

ஓர்
ஒளி இழைக்கான
ஓராயிரத் தவக்குரல்கள்
மனச்சந்நிதியில்!

இந்த
அந்தகாரத்தின் போர்வை
அகற்றப்பட்டே ஆகவேண்டும்

திசைகளைக் கீறி
வெளிச்சங்கள்
பீறிடச் செய்வோம்

புதிய
யுகம்ஒன்று புலரும்
அக்கினிக்

குளியல் நடத்திய
எமது வானத்தில்
வெளிச்சங்கள்
குடியிருக்க விண்ணப்பிக்கும்

எச்சரிக்கை!
இந்த
இருட்டில் நாங்கள் இருப்பது
புதைகுழியின் இருட்டில்
ஒரு பிணம்
இருப்பது போல் அல்ல!

பூமியின் ஆழ இருட்டில்
ஒருவிதைபோல்
இருக்கிறோம்!

எங்கள் விஸ்வரூபம்
நாளை ஒரு
ராட்சஸ விருட்சமாய்
வடிவெடுக்கும்

அப்போது
ஆகாயம் பிளந்து
எங்கள் கிளைகள்
சூரிய சந்திரர்களைக்
கைது செய்து
கூரைகளில் தீபமேற்றும்

நட்சத்திரங்களைப் பெயர்த்து
நடைபாதைகளில்
ஒளிக்கோலம் தீட்டும்!



# சோமாலியா என்ற ஒரு சோகம்

வல்லரசுகளே!
வல்லரசுகளே!
ஆகாயத்தை
விளையாட்டுத் திடலாக்கி
விண்கலப் போட்டி நடத்தும்
வல்லரசுகளே!
வல்லரசுகளே!

பூமிக்கு வாருங்கள்
வந்து
சோமாலியாவின்
சோகம் பாருங்கள்.

பசிக்கு
மனிதன் தின்பது போய்
இங்கே
பசியே
மனிதனைத் தின்கிறது!

உறுபசியும்
ஓவாப் பிணியும்
உறவு முறியாமல்
இங்கேதான்
உற்சாகமாய்
குடும்பம் நடத்துகின்றன!

சோமாலியாவின்
பாவப்பட்ட மக்களைப்
படத்தில் பார்க்கும்போதே
விழிகளில் நதிவெள்ளம்;
நேரில் கண்டால்
நெஞ்சுக்குள்
நெருப்புமழைப் பெய்யுமோ?

இங்கே
மயானமென்று
தனியாக ஏதுமில்லை
சோமாலியாவே
மயானமாய் மாறுவதால்!

தமது
மரணத்தைத்

தாமே பார்க்கும்
மனிதர்கள் சோமாலியாவில்!

வீதியெங்கும்
பிணங்கள் வீழ்ந்து
கிடப்பதால்
உதிக்கும் சூரியனின்
ஒவ்வொரு கிரணமும்
பூமியைத் தொடுவதற்குப்
புலம்பித் தவிக்கின்றன!

இந்தப்
பட்டினிப் பிணங்கள் மீது
பூமாலைகள் போடாத
பரிதாபம் பார்த்து
வீதியோரச் செடிகளே
பிரேதங்கள் மீது
பூக்கள் சொரிகின்றன!

பஞ்சம்
பசி
பட்டினி
பிணி
மரணம்
இந்தப்
பக்கங்கள் நிறைந்த
சோமாலியா புத்தகம்

மனிதஉயிர்
எத்தனை மலிவானது என்றா
பிரபஞ்சத்திற்குப்
போதிக்கிறது!

மரண வெள்ளத்தில்
ஒரு நகரமே
மூழ்க்கிக் கொண்டிருக்கிறது,

உலகமோ
கோடிக்கணக்கில்
செலவழித்து
ஒலிம்பிக் பந்தயம்
நடத்தி முடித்துவிட்டது!

குற்றுயிராய் கிடக்கும்
ஒரு
தேசத்தை மிதித்துக்
கொண்டு
நாம்
பூங்காவனம் போகிறோம்!

இரண்டாயிரம்
கோடிடாலர் செலவில்
மனிதன் அமர்ந்த
செயற்கைக் கோளைச்
செவ்வாய்க் கிரகம்
அனுப்பப் போகிறதாம்
அமெரிக்கா,
தேவைதானா இது?
இதில்
நூற்றில் ஒருபங்கு
செலவழித்தாலும் போதும்
சோமாலியா சுகம்பெறும்!

இரக்கம் என்ன
இறந்தா போனது?

எப்போது முளைத்தன
கருணையின் கரங்களில்
இரும்பு விரல்கள்!

இறைந்து கிடக்கும்
காகிதக் குப்பைகளாய்
சாலைகளில் சடலங்கள்!

புதைத்தால்
புழுக்கள் உண்ணவும்
இவர்கள்
தேகத்தில் தசைகள் இல்லை!

ஓ... விஞ்ஞானமே
பார்த்தாயா
உனது
ஆயுத கர்ப்பத்தால்
விளையும் ஆபத்துகளை!

ஓ... விஞ்ஞானமே
நேசம் பொய்த்த
உன்
அசுரப் பார்வையால்
காயம்படும்

மானுடம் குறித்துக்
கவலையே இல்லையா
உனக்கு?

நீ
பெய்த பிழையில்
பிரபஞ்சம் எங்கும்
பிணங்களின் சாகுபடி!

இந்தச்
சோமாலியாவின்
சோகப் புத்திரர்கள் ஏந்தும்
யாசகப் பாத்திரம்
நிரம்பி வழிகிறது
மனித நேயத்தால் அல்ல;
அவர்கள் கண்ணீரால்!

அதிசயம்தான்!
உடம்பில் ஓட
ஒருதுளி ரத்தம்
இல்லாத போது
கண்களில் மட்டும்
கண்ணீர்ச் சுரப்பது!



நாடு கடந்து வந்தீர்கள்
மன்னிக்கவும் பறவைகளே
எங்கள் நாட்டில் மதச்சண்டை.





# விழி! எழு!

இந்தியனே! இந்தியனே
இது என்ன தூக்கம்?
உன் தூக்கம்
கலைவதுதான் எப்போது!

உன்னைத்
தொட்டில் இட்டு
இந்தத் தேசம்
தாலாட்டு இசைப்பது
நீ
ஓய்வு கொள்ள அல்ல,
தூங்கும்போது
உன்னிடம் திருடத்தான்!

நீ
தூங்கிக் கொண்டிருந்தால்
உனது நாளைகள்
அர்ஷத்மேதாக்களால்
அபகரிக்கப்படும்

அதோ பார்
உன் தூக்கத்தால்
அனாதைகளாய்
திரியும் நேற்றுகள்

உன்னை விலக்கிவிட்டு
வேறுதிசை போகப்
பாதைத் தேடும்
இன்றுகள்!

மிட்டா மிராசுகள்
எரித்த
உனது சகத்தோழன்
பிணவாடை
சுவாசித்தபடி
என்ன
சுகமாய்த் தூங்குகிறாய்!

காவல் நிலைய
லாக்கப்புகளில்
கற்பழிக்கப்பட்ட
சகோதரிகளின்
கண்ணீர்க் குரல்கள்
உனக்கென்ன
தாலாட்டுக் கீதங்களா?

தம்மையே
தூக்க மாத்திரையாய் ஊட்டி
உன்னைத்
தூங்க வைப்பதில்
எல்லா
அரசியல்வாதிகளுக்கும்
ஏகப்பட்ட அவசரம்,
நீ
விழிக்கக்கூடாது என்பதில்

நமது
சினிமாக்காரனுக்கு
அதிக சிரத்தை!

உன்
தூக்கத்தை நிரந்தரமாக்க
சூரியனையே
அப்புறப்படுத்தும்
சூழ்ச்சிகள் நடக்கின்றன!

இப்படியே நீ
தூங்கிக் கிடந்தால்
உன்னைச் சுற்றி
கல்லறைச் சுவர்கள்
கட்டப்படுவது
கட்டாயம் ஆகிவிடும்.

'தூங்கவில்லை
வழிமூடிச் சிந்திக்கிறேன்'
என்றா சொல்கிறாய்?

நம்ப மாட்டேன்
தேர்ந்தெடுக்கப்பட்ட
சட்டமன்ற,நாடாளுமன்ற
உறுப்பினர்களைப் பார்த்த
பின்பும்
நீ
சிந்திப்பதாய்ச் சொல்வதை
நம்பச்
சிரமமாய்த்தான் இருக்கிறது!

எத்தனை விபத்துகள்
உன்னைச் சுற்றிலும்!

யாரோ ஒரு பணக்காரன்
தோட்டத்து
வெளுத்துப் போன
ரோஜாவுக்கு
வண்ணம் பூச
உன் ரத்தம்
விற்பனைக்கு போகிறது!

தூங்கும் சமயத்தில்
உன்னிலிருந்து
களவாடப்பட்ட
ஒவ்வொரு அங்கமும்
கடைவீதி ஏலத்தில்!

இருந்தும்
எப்படி உனக்கு
இத்தனை ஆழ்ந்த உறக்கம்?

உன்னைத்
தட்டி எழுப்பும்
திருப்பள்ளி எழுச்சிப் பாட
எந்தவொரு கவிஞனும்
இங்கே வரமாட்டான்

அவர்கள் எல்லோரும்
பாட்டெழுத
சினிமாக்காரன் வீடுகளில்
படை எடுப்பதாய்ச் செய்தி.

விழி! எழு!
இதுவரை
தூங்கிக் கழித்தற்குப்
பதிலாய் நீ

இன்னும் ஒரு நூற்றாண்டு
விழித்தப்படி போராட
வேண்டும்
உனது
ஆயுதங்களை
ஆயத்தப்படுத்து

காற்று விழிக்கவைக்கும்
தீயைப் போலக்
கண்களைத் திற!

காந்தியம் பாடும்
அகிம்சைத் தாலாட்டைக்
கிழித்தெறி!

நீ
அனந்தசயனத்தில்
அமிழ்ந்து கிடக்கும்போது
உன்
காலைகள்
களவு போகின்றன!

மௌடீகம் புகட்டிய
இந்தத்
தூக்க மயக்கம்
தொலைவதுதான் எப்போது?

உன்னிலிருந்து பறித்த
நரம்புகளைப்
பின்னிப் பின்னி
உனக்கொரு
பாடை முடையப் படுகிறது
இன்னுமா தூக்கம்!

இப்படியே நீ
தூங்கிக் கிடந்தால்
உனது
வயற்காட்டில்
எதிர்காலத்தைக்
கொத்தித் தின்னும்
பறவைகள் மீது
கல்லெறிவது யாராம்?

தூரத்துத் தூக்கத்தை
சோம்பல் விடு
கண்ணீர் துடை!

ஒவ்வொரு
துளி வியர்வைக்கும்
ஆராதனை செய்!

ஒவ்வொரு
துளி ரத்தத்திற்கும்
மரியாதை கற்பி!

நீலாம்பரி பாட
உனக்கருகில் வருவார்
நெஞ்சைக் கிழி!

விசிறிக் கொண்டிருக்கும்
விரல்கள் முறி!

இந்தியனே! இந்தியனே!
இதுஎன்ன தூக்கம்!
உன்
தூக்கம்
கலைவதுதான் எப்போது!



# இந்தியனைக் காணவில்லை...

என்பது கோடி முகங்கள்
வேறுவேறாய் இருக்கலாம்
இதயம் மட்டும் ஒன்று

ஏக இந்தியா
என்பதே இனிய வேதம்
இந்தியர்நாம்
பேதம் நமக்குள்
பேசுவது இழிவு

முத்துமகுடம்
பாரத தேவிக்கு
பனி இமயம் என்றால்
அவள்பாதச் சிலம்பொலி
குமரிமுனைக் கடல்அலைகள்

இந்த
சப்தங்களில்
சந்தோஷம் கண்ட இதயம்

சரிதானா
இவையென்று
சோதித்துப் பார்க்க
பயணம் ஒன்று புறப்பட்டது...

ஒவ்வொரு
மாநிலத்திலும்
இந்தியா
மெல்ல மெல்ல
இறந்து கொண்டிருந்தது.

உதடுகளின் எச்சங்களால்
வார்த்தைகள் கோப்பைகளில்
வடித்து வைத்ததெல்லாம்
வெற்றுக் கோஷங்கள்.

எல்லைகளில்
மட்டும்தானா வேலிகள்
இதயங்களிலும் கூடத்தான்!

சிதையில் கிடத்தி
தகன நெருப்பால்
சுடப்படும் பிணமாய்
மனித நேயம்!

விரோத
வேருக்கு நீருற்ற
திறந்து கிடக்கும் மதகுகள்
மாநிலத்துக்கு மாநிலம்

ஒன்றின்மீது ஒன்று
பிரயோகம் செய்ய
படைகலன் தயாரிக்கும்
பட்டறைகளாய்
சட்டமன்றங்கள்!

இந்தியன்
இந்தியன் என்றவாறே
அந்நியனாகும் அநியாயம்

எத்தனை
கடவுள் இங்கு உண்டோ
அத்தனை
பேதங்கள்
அனைவருக்குள்ளும்!

எத்தனை மதங்கள் இங்கு
உண்டோ
அத்தனை
மாச்சரியங்கள் மனிதரிடை!

எத்தனை
கட்சிகள் இங்கு உண்டோ
அத்தனை
குத்துவெட்டுகள்
தொண்டர்களுக்குள்!

வழிகாட்டிகளுக்கு
இடையிலும் வேற்றுமைகள்
பாதைகள் எப்படி
இலக்குகள் போய்ச்சேரும்!

ஆயுதங்கள் ஏந்துவது
அனைவருக்கும்
எளிதானதால்
வயல்கள் எங்கணும்
பிணங்கள் வளர்கின்றன!




தூக்குக் கயிறாய் மாறும்
ஆலய மணிக்கயிறுகள்!

ஒவ்வொருக்கும்
ரோஜா பூப்பதை விடவும்
அதன்
முள்கள் செழிப்பதில்தான்
முளைப்புகள் அதிகம்!

துண்டு துண்டாய்
சிதறிக் கிடக்கும்
இந்தியனைச்
சேகரிப்பது யார்?

பாரதப் பயணம்
முடிந்து திரும்பிய
இதயத்திடம் கேட்டேன்,

இந்தியனைப் பார்த்தாயா?

இந்தியாவின்
எட்டுத் திசைகளிலும்,
இந்தியனைக் காணவில்லை
ஏன்
மனிதனையே காணவில்லை

பாவம்
ஆடைவாங்கப் போன
இதயத்திற்குக்
கிடைத்ததெல்லாம்
கந்தல்கள்!





# இசை

முகம்போர்த்தி
அமர்ந்திருந்த மௌனம்
இடம் பெயர்ந்தது
மெல்ல மெல்ல

ஓர் இசை இழையின்
முகதரிசனம் கண்டு

சூனியத்தின்
அரவணைப்பில் மயங்கிய
ஆன்ம வாசலோரம்
ஆனந்தக் களிப்பு!

கணங்களின்
ஊமை உதடுகளில்
ராகத்தின் சாரம்.

அரும்பு கட்டிய
இசை இழை
பூவாகப் பரிணமித்தது

தன்னை
அலங்கரித்துக்கொள்ள
காற்று இப்போது
சங்கீதத்திடம்
கடன் கேட்டது

ஓசைகளை
இஸ்திரிபோட்டு
இப்படி
இன்னிசையாக்கும்
மாயத்தில்
இதயம்
அமிர்தத்தில் ஊறியது

தாகத்தோடு
காத்துக் கிடந்த
காது மடல்களில்
தாளங்களின் பிரவாகம்

மௌனம்
சங்கீதச் சந்நிதியில்
ஒருவேள்வி துவங்கியது
தன்னையும்
ராகத் துளியாய்
மாற்றிவிடும் மகத்துவம்
கருதி

மௌனத்தின்
அராஜகம் முறியடித்துத்
தனது
மடியில் கிடத்தி
உணர்வுகளுக்கு
உணவு பரிமாறியது
சங்கீதம்

லயக் கோட்டில்
நர்த்தனம் புரியும்
சங்கீதப்
பாதச் சதங்கைகளின்
ராகச் சிலிர்ப்புகளில்
வார்த்தைகள்
ஆபரணங்கள் சூடின.
மௌனம்
விரித்த வலைகிழித்து
மனசு
ஆகாயம் பறக்க
சங்கீதம்
சிறகுகள் பொறுத்தியது

மௌனத்தால்
உறைந்து போன
மனதின்
கரை வெளிகளில்
சின்னச் சின்ன
நீரோடைகளுக்கு
சங்கீதம்
பாத்தி வெட்டியது

மௌனம்
கிறுக்கிக் கிறுக்கி
அலங்கோலம் செய்த
சிந்தனைகளில்
சங்கீதம்
சித்திரக் கோலங்கள்
சித்தரித்து வைத்தது.

நிமிடங்களை
யுகங்களாய்
நீட்டிப் பார்த்த
மௌனத்தின் விழிகளில்

சங்கீதம்
யுகங்களை
வினாடிகளாய் மாற்றும்
நூதனம் போதித்தது

சங்கீத
வாசம் நுகர்ந்து
காலம் பறப்பது
புலன்களுக்கும் புரிவதில்லை

பிணங்களாய்
வீழ்ந்து கிடக்கும்
மௌனங்களைச்
சவப்பெட்டியில் அடக்கம்
செய்து
சங்கீதப்
பூச்செடிகளுக்குத்
தொட்டிகள் தயாரிப்போம்.





# பூட்டுகள் தேவைதான்

தெருவெங்கும்
திருவள்ளுவர்கள்
பாடம் நடத்தட்டும்

வீதி தோறும்
புத்தர்கள்
போதனைகள் செய்யட்டும்

பூட்டுகள்
இல்லாத சமுதாயம்
பூப்பது கடினம்

பூட்டு
நேர்மையின்
நெற்றிக்கறை!

வாசல் கதவுகளுக்குப்
பூட்டுகள் கண்டோமே
மனக்கதவுக்குப்
பூட்டுச் செய்தோமா?

நாம்
களவாடப்படுகிறோம்
உணர்ச்சிகளால்
ஆசைகளால்
இச்சைகளால்
பூட்டொன்று
கண்டுபிடித்தோமா?

முயன் முயன்று
பூட்டொன்று
மனக்கதவுக்கு
கண்டுவிட்டால்
கதவுகளுக்குப்
பூட்டுக்
கட்டாயம் இல்லை!

அவநம்பிக்கையாலா
ஆதிமனிதன்
பூட்டைச் செய்தான்?

இல்லை... இல்லை...

சுயநலம்
பூத்தபோதுதான்
பூட்டு செய்ய அவன்
புத்தி தீட்டி இருப்பான்.

பூட்டுகள்
பாதுகாக்க மட்டும் அல்ல
பதுக்கி வைக்கவும்
கூடத்தான்

சில
பூட்டுகள்
வியர்வைத் துளிகளைப்
பாதுகாக்கும்

சிலபூட்டுகளோ
பறிக்கப்பட்ட
ரத்தத் துளிகளைப்
பதுக்கிவைக்கும்
ஆழமாய்
சிந்தனை செய்தால்
வறுமை வியாதிக்குப்
பூட்டே
விஷக்கிருமி
என்பது புரியும்!

சிலஇடங்களில்
பூட்டுகள்
உடைபடும்போது
புரட்சி
புன்னகை செய்யலாம்

சில இடங்களில்
பூட்டுகள் உடையும்போது
நேர்மை
தீக்குளிக்கலாம்!

நமது
ஆன்மாவை
மென்று தின்னும்
ஆசையின் வாய்க்குப்
பூட்டொன்று செய்யுங்கள்

பிற பூட்டுகள்
பயனின்றிப் போகலாம்

வளங்கள்
பெருகுவதின்
அடையாளம் அல்ல
பூட்டுகள் பெருகுவது

அது

சுயநலம்
ஆழமாய்
வேர்விடுவதின் அர்த்தம்!

திருடு
போகாமல் இருக்கவே
பூட்டுவதாய்
நீங்கள் சொல்கிறீர்கள்

நானோ
ஒரு திருடன்
உருவாகக் கூடாது
என்பதற்காக
பூட்டுகிறேன்!





# இருட்டு

பலகோடி விழிகள்
பசியாறுவது
இந்தக்
குடையின் கீழ்தான்!

எதற்கிந்த தார்ச்சாலை
ஓ....
தென்றல்
நடந்து வரத்தானோ!

இந்தக்
கறுப்பு மயானத்தில்
மனிதனின் ஆயுள்
தவணை முறையில்
தகனமாகிறது!

இருட்டின் மௌனத்தை
மொழிபெயர்க்கவா
இந்த நட்சத்திர லிபிகள்!

பூக்களின்
மொட்டுகள் திறக்கும்
சாவி
இருட்டின் கைவசம்!

ராகம் மீட்டும்
வண்டுகளுக்கு
இரவே
தம்பூரா இசைக்கும்!

இருட்டின்
சம்மதம் கேட்டே
ஒவ்வொரு விடியலும்
பூமிக்கு வருகிறது!

இந்தக்
கறுப்பு நீரோடையின்
தண்ணீர்ப் பருகி
காமம் தாகம் தணிகிறது!

இருட்டு
ஏனைத்திற்கு உரியதல்ல
மானுடம்
இயற்றும் வேள்விக்குக்
கோள்கள் வழங்கும்
கொடையே இருட்டு!

தீபங்களே!
திமிர் வேண்டாம்
உங்கள் பிரகாசம்
இருட்டின் பிச்சை!

இருட்டும் வெளிச்சம்தான்
இல்லாவிட்டால்
நிலாவையும்
நட்சத்திரங்களையும்
நாம்
எப்படிக் கண்டெடுப்பது!

சிருஷ்டியின்
நாபிக்கொடிக்கு
இந்தத்
தறியில்தான் நெசவு!

திருமணத்தின் நெற்றியில்
இருட்டே
திலகம் வைக்கிறது!

இருட்டு மட்டும்
இல்லாமல் போனால்
தொட்டில் செய்யும் தொழில்
துவண்டு போயிருக்கும்

அதிகாலை
தன்னை
அலங்கரித்துக் கொள்ள
இருட்டுத்தானே
சூரியப் பதக்கம்
செய்து கொடுக்கிறது

சப்தங்களைக்
கொய்து கொய்து
இருட்டுத் தொடுக்கும்
மௌன மாலைக்கு
ஆகாயம்
பன்னீர்த் தூவி
ஆனந்திக்கிறது!

யார்சொன்னது
இருட்டு
சிரிக்காதென்று
அதோ பாருங்கள்
மல்லிகைப் பூக்களை!
இருட்டின் புன்னகையாய்!

இந்தக்
கறுப்புத் தேன்குடித்துப்
பிரபஞ்சமே
பிரக்ஞை இழக்கிறது!

இந்தக்
கறுப்புக் கடலில்
மூழ்கி வெளிவரும்
திசைகளின்
கைகளில் பகல்கள்!





# ஒரு ஜோசியக் கிளியின் பிரகடனம்

போதும்... போதும்...
எனக்காக
இங்கே யாரும்
இரக்கப்பட வேண்டாம்

யார் அது–
ஆகாயம் காணாத
எனது
சிறகுகள் குறித்து
அனுதாபத் தீர்மானம்
இயற்ற வேண்டாம்

அடிமை போல
நான்
அடைபட்டுக் கிடப்பதாய்
எவரும்
அங்கலாய்க்க வேண்டாம்!

பூமரக் கிளைகளில்
போய் அமர்ந்து
எனது சிறகுகளுக்குத்
திசைகளை
அறிமுகம்
செய்யவில்லைதான்

அதனாலென்ன...?

ஜோசியம் பார்க்க
எவரேனும் வரும்போது

சின்ன மரப்பெட்டிக்குள்
சிறைவைக்கப்பட்ட எனக்கு
தவணை முறையிலே
விடுதலை தருவதுண்டு

சீட்டு
எடுக்கும் போதெல்லாம்
எனக்கும்
ஒருநெல்மணி பரிசுண்டு!

வானக் கனாக்கள்
பொய்த்துப் போன
எனது நெஞ்சில்
வருத்தம் ஏதுமில்லை

என்
ஜீவிதம் ஆகாயத்தில்
நிச்சயக்கப்படாத போது
பெட்டிக்குள் சுவாசிப்பதே
பெரும்பேறாய் ஆனது!

மேகம் மிதக்கும்
நீலவானம்
எப்படி இருக்கும்?
கண்டதில்லை இதுவரை

வானில்
சகோதரக் கிளிகள்
பறந்து போவதைப்
பார்க்கும் போது
துளியூண்டு சோகம்
மனசைத் தொடுவதுண்டு
ஆனால்... ஆனால்...

ஆரூடம் கேட்க
மனிதர்கள் என்னை
அண்டி வரும்போதோ

"மனிதரின்
எதிர்காலம் என்னிடமா!"

'நான்
எடுத்து நீட்டும்
கையகலச் சீட்டா
அவரின் நெஞ்சில்
நம்பிக்கை விதைக்கிறது'

இந்த
இனிய நினைவுகளால்
பறக்க இயலாத மனவலி
பறந்து போகிறது
எனைவிட்டு

ஒன்று தெரியுமா?
ஓர்
அனாதைக் கிழவனுக்குக்
கால்வயிறு கஞ்சி
அன்றாடம்
ஊற்றுவது நான்தான்!

எனக்கு
அனுதாபப்படும் மானிடரே!
இந்த
வயோதிகன் பசிகுறித்து
வருத்தப்பட
உங்களில் யாருமில்லையே!

மனிதர்களால்
புறக்கணிக்கப்பட்ட
கிழவனுக்கு
இந்தக்
கிளியின் சிறகுகளில்
அடைக்கலம்!

என்னால்
ஓர் அனாதைக்கு
ஆகாரம் கிடைக்கிறது
என்றால்
அடிமையாய் இருப்பதில்
எனக்கொன்றும்
ஆட்சேபம் இல்லை!

பிறருக்குச்
சோகம் கொடுக்கும்
சுதந்திரத்தைவிட
அடிமையாய் இருந்து
அடுத்தவருக்கு
ஆனந்தம் தருவது
அறம்தான்!

பிறவியின் மகத்துவம்
பிறருக்குப்
பயன்படும்
தருணங்களில்தான்.

சுற்றித் திரிந்து
வானில் சுதந்திரமாய்
செத்துப் போகாமல்
கூண்டுக்குள்
அடைபட்டு
ஒருமனிதன் சுவாசத்திற்கு
நான்
கற்றாகிறேனே
அதுவே பெருமை!

எனது சிறகுகள்
உங்கள்
விரல்களை விடவும்
கீர்த்தி மிக்கவை
கிழவனின்
கண்ணீரைத் துடைப்பதால்!

இந்தப்
பச்சைக்கிளியின் அலகுதான்
கிழவனின்
பசிக்குப் பாலூட்டுகிறது!

ஓர்
அடிமையின் அடைக்கலத்தில்
ஒரு
சுதந்திர மனிதன் உயிர்!

கூறுங்களேன்
உங்கள் சுதந்திரம்
எனது
அடிமைத் தனத்தைவிட
எந்தவிதம் உயர்ந்ததென்று?

நான்
இழந்து போன
சுதந்திரம்
ஒரு மனிதனுக்குள்ளே
உயிராய்
ஊறிக் கொண்டிருக்கும்
உன்னதம் கவனியுங்கள்

அடிமையாய் இருப்பதில்
நான்
அவமானப்படுவதாய்
யாரேனும் நினைத்தால்
உங்களுக்காக
அனுதாபப்படுகிறேன்!





# ஆட்சி பிடிக்கும் அதிசயம்

இந்திய நாட்டுச்
செடிகளுக்குப்
பூப்பூக்க அச்சம்;
அத்தனைப் பூக்களும்
பிணங்களை அலங்கரிக்க
பறிக்கப்படுவதால்!

நிதமும் ரத்தம் கலப்பதால்!
எல்லா நதிகளிலும்
தண்ணீர் சுத்தமில்லை

காற்று சுமந்துவரும்
தோட்டா சப்தங்களால்
காதுகள் ரணம்!

இந்திய வானில்
கவிந்து கிடக்கும்
புகை மூட்டம்
ஆலைகளின் புகையா?
அல்ல.... அல்ல...

செந்தீயில் வேகும்
சேரிகளின் புகை!

பிணவாடையில்
மூச்சுத் திணறும் மானுடம்!

தமது
கூர்தீட்டிய
ஜாதி
மத நகங்களால்
பாரத மாதாவின்
குரல்வளை நெறிக்கும்
குரோதங்கள்

பற்றி எரியும் பம்பாய்
தோட்டாக்களால்
காயம்படும் காஷ்மீரம்

அன்றாடம்
ரத்தக்குளியல் நடத்தும்
அஸ்ஸாம்

பிரேதங்களைப்
பார்க்காவிட்டால்
பொழுது போகாத பஞ்சாப்

இரத்தம் பட்டுப்பட்டு
இன்னும் கொஞ்ச நாளில்
இமயமலையே
சிவப்பாய் போகலாம்

துப்பாக்கிச் சப்தம்
கேட்காத நாட்கள்
பாரத தேவிக்கும்
தூக்கம் கெட்ட
நாட்களாகும்!

நமது தெய்வங்களுக்கும்
பூமாலை
அணிந்து அணிந்து
வெறுத்துப் போனதாம்

மண்டைஓடு
மாலைகளுக்கே
கழுத்து நீட்டுகின்றன!

இரண்டாம்
உலகப் போரில்
இறந்து வீழ்ந்த ஜப்பான்
ஒரு பொனிக்ஸ் பறவையாய்
உயிர்த்தெழுந்தது!

உயிரோடு இருந்த
இந்தியாவோ
செத்துக் கொண்டிருக்கிறது!

பாரததேவியின்
எண்பது கோடி உதடுகளில்
எந்த நேரமும் சப்தங்கள்

பிணங்களின்
முகத்தில் விழித்தபடிதான்
இந்திய நாட்டில்
சூரியன் எழுகிறது!

வன்முறைக்குத்
தீனிபோட்டு
நமது
அரசியல் சாசனத்திற்கும்
அலுத்துப் போனது!

கண்டறிந்தோமா
இந்த
காயங்களுக்கான காரணம்!

இந்தச்
சாக்கடையின்
நதிமூலம் எங்கே?
சிந்தித்தோமா?

இந்த
ஜுவாலைக்கு
நெருப்புப் பற்றவைத்து யார்?
சோதித்தோமா?

இல்லையே... இல்லையே!

நாம் காயங்கள் மீது
திராவகம் பூசுகிறோம்

புதிய புதிய பாதை
சாக்கடைக்குப்
போட்டுத் தருகிறோம்!

இன்னும் கொஞ்சம்
இன்னும் கொஞ்சம் என்று
நெருப்புக்கு
விறகுத்தீனி
ஊட்டுகிறோம்!

எல்லாத் தலைவனுக்கும்
நாற்காலிமீதே நப்பாசை

அதனால்
தேசமெங்கும்
பாடைகளின் ஊர்வலம்!

இந்தியாவில் மட்டுமே
இயலும்

பிணங்கள் வைத்து
ஆட்சிப்பிடிக்கும் அதிசயம்!

தேச ஆடையில்
அடர்த்தியாய் அழுக்கு

அடித்துத் துவைத்தால்
கிழிந்து விடுமோ
என்ற அச்சம்

துவைக்கா விட்டால்
துர்நாற்றம்

இந்தச்
சிக்கல் களைய
நாம்
என்ன செய்யப்
போகிறோம்?



வெளுத்த துணிகள் காயும்
ஆற்றுக் கரையோரம்
அழுக்கு வேட்டி வண்ணான்





# தொட்டில் சிசுக்கள்

அரசாங்கம் நீட்டும்
தொட்டில் பாத்திரத்தில்
நீங்கள்
பரிசா? பிச்சையா?

உங்களுக்கு
முகவரி கிடைத்து விட்டது;
ஆனாலும்
நீங்கள்
பட்டுவாடா
செய்ய முடியாத அஞ்சல்கள்!

நீங்கள்
பூவிலிருந்து
கிளம்பிய நறுமணம் அல்ல
பிணவறையிலிருந்து
புறப்பட்ட நாற்றம்!

நீங்கள்
சிரிப்பில் சிந்திய
கண்ணீர்த் துளிகளா? அல்ல
புண்ணிலிருந்து
வழியும் ரத்தத் துளிகள்!

உங்கள் சுவடுகள்
கால வெளியில்
நாகரிகத்தின் முத்திரைகளா?
இல்லை...

சிறுகச் சிறுகச்
செத்துக் கொண்டிருக்கும்
கலாசாரத்தின்
கடைவாய் எச்சில்கள்

தொலைந்து போனதிலிருந்து
கிடைக்கப் பெற்றவர்களே!
கிடைக்கப் பெற்றதாலேயே
தொலையப் போகிறவர்கள்
நீங்கள்!

நாளை
வாகனப் பயணம் போகலாம்
அப்போதும்
தொட்டில்
உங்கள் தோள்மீது
தொற்றிக் கொண்டே வரும்!

எதனை உச்சரிக்க
நீங்கள்
உதடுகள் ஆனீர்கள்?
வரத்தையா?
சாபத்தையா?

குறியீடுகளாய் ஆகி
நீங்கள் சுட்டுவதுதான் என்ன
நரகத்தையா?
சொர்க்கத்தையா?

பாயில் புதைந்தது
தொட்டிலில் விளைகிறதோ!

எந்த
அசுர கானத்தின்
அவரோகணங்கள் நீங்கள்

உங்களால்
தொட்டிலுக்குப் பெருமையா?
தொட்டிலால்
உங்களுக்குப் பெருமையா?
நாளைய சமுதாயம்
இதுகுறித்து
பட்டிமன்றம் கூட நடத்தலாம்!

தவம் இருக்கும்
கொடிகளை விடுத்து
தவறு செய்யும்
கிளைகளில்
ஏன்பூத்தீர்கள் பூக்களே!

பத்துமாதப் பொக்கிஷங்கள்
அரசாங்க கஜானாவில்
அனாதைப் பொருளாய்ச்
சேர்ப்பிக்கத்தானா

நிச்சயமாய்
நான் நம்பமாட்டேன்
உங்களைப் பார்த்தபின்பு;
இருபத்தியோராம்
நூற்றாண்டு
நாகரீகமானது என்று!

சாதியை
ஒழிப்போம் என்று
உரக்கக்கூறிக் கொண்டே
அரசாங்கமே
சாதியை வளர்க்கிறது
ஆம்
தொட்டில் சாதி!

ஏதோ ஓர் தீயில்
எரிந்து போன கனாக்களின்
சாம்பல்கள் நீங்கள்

நீங்கள்
திருநீறாய் மாறுவீர்களா?
புழுதியாய்
தெருவில் புரள்வீர்களா?

கிழிந்துபோன
உங்கள்
ஆடைகள் தைக்கப்பட
இனி
ஊசிகள் கிடைக்குமா?

தாய்மையால்
புறக்கணிக்கப்பட்டவர்களே
உங்களால்
பெண்மையே
கேவலப் படலாம்!

புரியவில்லை
சமூகக் கொடியில்
நீங்கள் பூக்களா? முட்களா?



# இன்னொரு முகம்

போதும்...
போதும் நிறுத்துங்கள்
உங்கள் புகழ்ச்சிகளை.

உங்கள்
போலிப் புகழ்ச்சிகளால்
என் ஆன்மா
புண்படவே செய்கிறது

நான்
வார்த்தைகளின் விரோதி
மௌனத்தின் யாசகன்!

என் கண்களுக்குச்
சலங்கை கட்டும் வேலை
உங்களுக்கு எதற்கு?
அவைகளை அலங்கரிக்க
மருதாணிக் கோலமே
போதும்!

உங்கள்
எச்சில் பண்டங்களால்
நிரம்புவதை விடவும்
காலியாய் இருப்பதே
இந்த
பாத்திரத்துக்குக் கௌரவம்

எனது
சொப்பனங்களின் தவம்
உங்கள்
சப்தங்களில் கலைகிறது!

உங்கள் புகழ்
பிரவாகமாய்ப் பெருகப்
பெருக
நான்
தீவாகிப் போவது திண்ணம்!

எனது
நந்தவனம்
நிஜப்பூக்களால் நிரம்பட்டும்
வேண்டாம் அதற்குக்
காகிதப் பூக்களின்
கவர்ச்சி

உங்கள் புகழ்
நீர்ஊற்றும் பூவாளி அல்ல
இந்தப்
பூச்செடி பூப்பூக்க

வாளியும் கயிறும் போல
என்னைச்
சேந்திச் சேந்தி
உங்கள்
தோட்டம் செழிப்பாக்க!

இருளின் அமைதியே
எனக்கு
இதமாக இருப்பதால்
உங்கள் பிரகாசம்
என்னைக்
கூசவே செய்கிறது!

நான்
சப்தங்களைக் கடந்து
போகும்
சாமர்த்தியம் கண்டுவிட்டேன்
இனியும்
ஓசைகளால்
என்னை உடைக்க முடியாது!

போதும்...
போதும் நிறுத்துங்கள்
உங்கள் புகழ்களை!

நீங்கள்
என்னைப் புகழ்வது கூட
எனது
கயிறுகள் பறித்து
உங்கள்
பம்பரங்கள் சுழலவிடத்தான்!

நான்
மாறிவிட்டேன்
உங்கள்
உதடு சிந்தும் மதுவில்
என்
காதுகள் உவகையுறாது!

ஆபரணங்கள்
என்று கூறி
விலங்குகள் பூட்டும்
விபரீதம் ஒழியுங்கள்

உங்கள்
நட்சத்திரத் தூவலுக்கு
எனது நிலாக்களை
நிவேதனம் இடமாட்டேன்!

ஆழம் தேடும்
எனது வேர்கள்
உங்கள்
ஆரவாரங்களால்
திசைமாறக் கூடும்!

சுயமுகத்தோடு
என்னைச்
சுவாசிக்க விடுங்கள்;
இன்னொரு முகத்தை
என்மீது ஒட்டிவைக்கும்
ஏற்பாடுகள் வேண்டாம்!

உங்கள்
புகழ்ச்சிகள்
படிந்து படிந்து
எனக்கே நான்
அந்நியமாகப் போகலாம்!

பளபளக்கும்
இந்தப்
பட்டாடை போர்த்திவிட்டு
நீங்கள்
உடம்புத் தோலையே
உரித்துக்கொள்வீர்கள்

விலகிப் போங்கள்!

மௌனங்கள் மூலமே
எனக்குள்
நாத உபாசனை;
சில நேரங்களில்
மொழிகளும் என்னைச்
சிரமப்படுத்தவே
செய்கின்றன!

ஆகாயம் நோக்கிய
எனது பார்வைகளை
உங்கள்
சில்லரைப் பேச்சுகளால்
சலனப் படுத்தாதீர்கள்

எனது மேகம்
உங்கள்
உதடுகளில் இல்லை

எனது பூக்கள்
உங்கள்
நாக்குகளில் பூப்பதில்லை

எனது வானம்
என் மனசுக்குள்

உங்கள்
பகட்டுச் சூரியன்கள்
அங்கே
கிரணங்கள் எழுத
அனுமதி கிடையாது!








# புயலுக்குத் தவம் செய்யும் விளக்கு

எத்தனையோ
வாசல்களில் நான்;
இன்னும்
எனது பிச்சைப் பாத்திரம்
நிறைய வில்லை!

எச்சில்களை
எதிர்பார்த்தே
என்
வாழ்க்கை இயங்குகிறது
பிறர் எச்சில்களை
நான்
ஏளனம் செய்வதில்லை
ஏன்தெரியுமா
இந்த
உலகமே
எச்சிலின் தொடர்ச்சிதானே!

வெளுத்த பகல்களிலும்
கறுத்த இரவுகளிலும
ஆகாரம் தேடி
அடுத்தவன் வாசல்களில்
வறுமைக்குரல் எழுப்புகிறேன்

வயோதிகத்தின்
இரும்புப்பிடியில் அகப்பட்டு
நோய்களின்
தண்டனையால் கதறுகிறேன்

எனது
வயிற்றுக் கல்லறையில்
உணவு
சவங்களின்
அடக்கம் நிகழாமல்
போவதால்
பிச்சை உணவை
யாசித்து நீளும்
கரங்களுக்கு ஓய்வே
கிடைப்பதில்லை

விதைத்துவிட்டு
அறுவடைக்காக

என்
வயலுக்குப் போனபோது
முட்களே
கதிர்களாய்
முளைத்துக் கிடந்ததால்
என்
பாதங்களில் ரத்தமும்
என்
கண்களில் கண்ணீரும்
பிரவகிக்கிறது

இந்தக்
காயங்களுக்கு
மருந்து போடவே
யாசகம் செய்கிறேன்.

கருணை நெஞ்சுகளின்
அபூர்வ தரிசனம்
அடிக்கடி கிடைக்கும்
கடாட்சம் பெறாததால்
அக்கினி வயிற்றில்
அவஸ்தைப் போக்கு
ஆகாரம் தேடி
அவலக்குரல் எழுப்புகிறேன்

பிச்சையிடும்
பிரியமானவர்கள்
யாருமில்லை;
ஆனால்
நானோ
மரண தேவனுக்கு
விருந்தாகப் பறிமாற
உடம்புப் பாத்திரத்தில்
உயிர்பிரசாதம் வைத்தபடி
அவனது
வருகைக்காக
ஏக்கத் தூதுகளை
கண்ணீர் அழைப்புகளை
விட்டபடி
வாசலில்
காத்துக் கிடக்கிறேன்.

இன்னும்
அவனது பாதங்கள்
என் குடிசையின்
தாழ்வாரத்தைத்
தீண்டவில்லை!

பலமற்ற
எதிர்க்கட்சி கொண்டுவந்த
நமபிக்கையில்லாத்
தீர்மானம்போல்,
காலத்தால்
என்
கனவுகள் யாவும்
நிராகரிக்கப்பட்டதால்
வளமைப் பதவியை
கைப்பற்ற முடியாமல்
வாழ்க்கைச்
சட்டமன்றத்தில்
நிராதரவாக
நின்று கொண்டிருக்கிறேன்

பாடைப் பல்லக்கில்
பவனிப் போக
பசிவேள்வி புரியும்

பரிதாப பக்தன்
எச்சில் சோற்று யாசகன்
என்றாலும்
மயான
மரணத்தின் உபாசகன்

இருட்டுகளில்
பிறவியைக்
கழித்துவிட்டதால்
வெளிச்சங்களின்
விவரம் புரியாமல் போனவன்

எனது வயிற்றில்
பசியின் ஜுவாலையும்
விழிகளில் கண்ணீரும்
ஓயாமல் போனதால்
சிரிப்புகளை
மறந்த உதடுகள்
கொண்டவன்

புயல்மரணத்தின்
வருகைக்காக
மெலிந்த
சுடர்விட்டபடி
இந்த
எலும்பு விளக்குத்
தவம்செய்கிறது

மரணத்தின்
பிரசன்னத்தால்
என்
தவம் பூரணத்வம்
பெறும்போது
பிச்சைப் பிரச்சனை
தீர்ந்து போன
ஒரு
தேகத்தின்
பாடை ஊர்வலம்
துவங்கிவிடும்!





# ஆடம்பரம்

ஆடம்பரம்
நடுத்தர வர்க்கத்து
நச்சுக் கோப்பை!

ஆடம்பரம்
சுட்டிக் காட்டும் சுடர்அல்ல
தொற்றிக் கொண்டிருக்கும்
தீ!

இந்த ஏணி
நம்மை ஏற்றி விடாது
இறக்கவே வழிசெய்யும்!

இந்த
விதை தூவும் வீடுகளில்
கடன் செடிகள்
பூப்பூப்பது கட்டாயம்!

நீ
தொலைந்து போக
வேண்டுமா

அப்படியானால்
ஆடம்பரத்தில் நுழை!

வட்டி கடனுக்கு நீ
வாசல் திறக்க வேண்டுமா?
ஆடம்பரத்துக்கு
அழைப்புவிடு

உறிஞ்சி உறிஞ்சி
உன்னையே ஒருநாள்
இதன்உதடுகள் குடித்துவிடும்

உன் ஆடம்பரம் கண்டு
பிறகண்கள் மெச்சலாம்
நாளை அழப்போகும்
உன் கண்களுக்கு
ஆறுதல் யார்தருவது?

ஆடம்பரத்தின்
பொய்க்கிளையில்
வறுமை கூடு கட்டுகிறது

இன்னுமா புரியவில்லை
இந்தக்
கானலின் பின் ஓடும்போது
உன்
பானைத் தண்ணீர் பாழாவது

வாழ்க்கைக்கு
நீ பூசும் இந்த நிறம்
நிரந்தரம் அல்ல!

ஏன் புரிவதில்லை,
ஆடம்பரத்தின் அசுரப் பற்கள்
உன்
கரன்சிகளைத் தின்றுவிடும்
என்பது

புரிந்துகொள்
இந்த வலைவீசி
பிடிக்கப் போவது
ஒன்றுமில்லை
நீதான் சிக்கிக்
கொள்கிறாய்!

கனாக்களுக்கு
அழகாய் ஆடை தைக்கும்
ஆடம்பரம்
வாழ்க்கைக்குச்
சவத் துணி நெய்து
வைக்கும்!

இது பிரதிபலிக்கும்
உன் பிம்பம்
பொய்யென்று புரிந்துகொள்

உன்
நிஜம் இதன் கவர்ச்சியிலா?
இல்லை... இல்லை...

இந்த
ஆகாயத் தேடலில்
நீ
பூமியை இழந்து
போகிறாய்!

வாழ்க்கை
இந்த
சப்தங்களை நேசிப்பதில்லை
ஒரு குயிலின் ஓசை போதும்
அது
இனிமையுற!





# அக்கினிப் பூக்கள்

யௌவனக் கனவுகளின்
சோபிதங்கள்
பூர்த்தியுறாத வெறுமையில்
கல்யாணக்
கானலின் பின்னே
ஓடும் புடவை மான்கள்.

காலப் பூஞ்சோலையில்
இவர்கள்
புஷ்பித்துக் கிடந்தாலும்,
வாழ்க்கைச் சந்நிதியில்
அர்ப்பணிக்க முடியாத
அக்கினிப் பூக்கள்

இவர்களின்
மனராகங்கள்
இசைத்துப் பார்க்கும்
சௌந்தர்ய வாழ்க்கைக்
கனவுகள் யாவும்
வறுமைப் புயலில்
பரிதாபகரமாய்ப்
புதைந்து போகின்றன

மீட்டும் விரல்களுக்காய்
தவம்புரியும்
இந்த
வீணைகளுக்குத்
தந்திகள் அறுந்துவிடும்
விபத்துகள்தான்
ஏற்படுகின்றன

கல்யாணக்
கூடுகளைத் தேடும்
இந்தப் புறாக்களுக்குத்
தனிமைக் கூண்டுகளே
பரிசுகளாய்க் கிடைக்கின்றன

அந்தக்
கூண்டுகளின்
இருண்டுபோன
தாழ்வாரங்களில்
இவர்களின்
சாந்திமுகூர்த்த
சொப்பனங்கள்

வறுமைத் தீயால்
தகனமாகின்றன!

காட்சிகளால்
நிராகரிக்கப்பட்ட
இந்தக்
கண்களுக்கு
இருட்டே சாசுவத மானது!

சிரிப்புகளால்
புறக்கணிக்கப்பட்ட
இந்த
உதடுகளுக்கு
அழுகையே சீதனமானது!

அதனால்தான்
தாலிக் கயிற்றைத்
தழுவ வேண்டிய
இவர்களின் கழுத்துகள்
தூக்குக் கயிற்றில்
தொங்கு கின்றன!

இந்த
வறுமைப் புத்திரிகளின்
ஆத்ம வீணையின்
சோகங்கள் யாவும்
நம் சமுதாய சபா மண்டபத்தில்
கேட்க முடியாத
ஊமை ராகங்கள்!



கூந்தல் முடித்த பாஞ்சாலி
பகடை உருட்டினாள்
பணயமாய் பாண்டவர்.





# எய்ட்ஸ் என்ற எழுத்துப் பிழை...

இந்த
இருட்டை ஒழிக்க
இன்னும் சூரியன்
அகப்பட வில்லை!

இந்தத்
தீயைத் தின்னும்
தண்ணீர் எப்போது
புறப்படுமோ?

எய்ட்ஸ்
மருந்துக்குத் தப்பிய
மனிதக் கொல்லி!

எல்லோரும்
காற்றைச் சுவாசிக்கும்போது
எய்ட்ஸ் நோயாளியோ
மரணம் சுவாசிக்கிறான்!

சில
சிற்றுண்டிச் சாலைகள்
வயிற்றைக் கெடுக்கும்;
பல
சிற்றின்பச் சாலைகள்
எய்ட்ஸை கொடுக்கும்!

மனைவியின் நெஞ்சில்
கற்பூரமாய்
எரிய வேண்டிய நீ,
சிவப்பு விளக்குப்
பெண்வீட்டுக் கட்டிலில்
ஊதுவர்த்தியாய்ப் புதைந்தால்
எய்ட்ஸ்
உன்னை
சிகரெட்டாய்ப் பிடிக்கும்

பாதை விதி
மீறினரல் விபத்து
படுக்கை விதி
மீறினால் எய்ட்ஸ்

இந்த
வாழ்க்கை

பிரபஞ்சம் உனக்காகப்
பூத்துத் தந்த பூ;
அதை நீ
கசக்கி எறிவது கேவலம்!

மனிதா! மனிதா! கேள்
விஞ்ஞான
விஸ்வரூபம் கண்டே
அச்சப்படாத எய்ட்ஸ்
ஒழுக்கம் என்ற
மந்திர ஒலிக்கு
அஞ்சி ஓடும்!

அந்தி
பகல்எழுதும் கவிதை,
தாவரம்,
பூமி எழுதும் கவிதை,
வாலிபமோ
பிறவி எழுதும் கவிதை!
அதில் எய்ட்ஸ் என்ற
எழுத்துப் பிழை வரலாமா?
நண்பா!

ஓ... சமூகமே!
உன் பார்வைகளில்
கொஞ்சம் பரிவு வை;

எய்ட்ஸ் நோயாளி
இழிவென்று நினைக்கும்
எண்ணம் அகற்று;

மருத்துவம் புறக்கணித்த
அந்த
மனிதன் மீது
கண்ணீர் சிந்தாவிட்டாலும்
எச்சில் துப்பாதே!



பாழாகும் படையல் உணவு
பசியே எடுக்காத
ஐயனார் சிலை.





# தேர்தல்

வாசல் தோறும்
ஏறிஇறங்க
முகமூடிகள்
ஒத்திகை பார்க்கின்றன!

வீதிகளின்
உதடுகளாய் ஆகிப்போன
ஒலிபெருக்கிகள்
காற்றுக்குப்
பொய்முத்தங்கள் பதிக்கும்

ஆம்
தேர்தல்
வந்துவிட்டது அல்லவா....

கிழிந்த
புடவை தைக்க
ஊசிநூல் இன்றி
பாரதப் புத்திரி தவிக்க
கரன்சிநோட்டுக் கிழிக்கும்
கட்சித் தலைவர்

அங்கவஸ்திரத்தில்
நட்சத்திர ஓட்டல்
சாம்பார் மணக்கும்!

இதுதான் நிஜம்
நமது தேர்தலினால்
பூக்கள்
நுழைய முடியாத இடங்களில்
தழைகள் நுழைந்து
விடுகின்றன!

திலகம் இடும் என்று
எதிர்பார்த்த
தேர்தல்
ஜனநாயகத்தின் முகத்தில்
கரியைத்தான் பூசுகிறது!

இந்தத்
தீப்பெட்டியினால்
இந்தியாவின் அடுப்புகள்
எரிவதில்லை

இந்தியர்களே எரிக்கப்
படுகிறார்கள்!

துடைக்க விரல்தேடிய
கண்ணீர்த் துளிகள்
கோஷங்கள்
துப்பிய எச்சிலால்
சுயம் இழந்து போகின்றன!

ஆசீர்வதிக்கப்பட்ட
வார்த்தைகள்
கவிதைகளாய்
எழுதப் படும்போது;

சபிக்கப்பட்ட வார்த்தைகளோ
தேர்தல் வாக்குறுதிகளாய்த்
தெருக்களில் இறைந்து
கிடக்கின்றன!

வாக்குச் சீட்டாய்
வடிவெடுக்கப் போகும்
காகிதத்தின் முகத்தில்
கண்ணீர்!

நாடாளுமன்ற உறுப்பினர்
நடவடிக்கைகளைப்
பார்த்தேன்;
இவர்களுக்காகவா
எழுநூறு கோடி
செலவழிக்கின்றது
நமது தேசம்?
கேவலம்...!



வெட்டுக் கிளியே
உன் மரணத்தை வாழ்த்துகிறேன்
பசியாறிய ஓணான்!





# போதும் காலமே....

போதும்...
காலமே போதும்
உன்
கைப்பிரம்பால் பட்ட அடி
போதும்...
காலமே போதும்!

துளித்துளியாய்
சேகரித்து வைத்த
என் நீரோடையை
நீ பாலைவனம்
ஆக்கிவிட்டாய்!

எச்சரிக்கையாய்த்தான்
எடுத்துவைக்கிறேன்
ஒவ்வொரு அடியையும்;
நீயோ
என்
பாதைகளைக் களவாடுகிறாய்
திசைகளை
ஒளித்துவைக்கிறாய்!

என்ன
கட்டளை இட்டாயோ
இப்போதெல்லாம்
இசைராகம் பூப்பதே இல்லை
என் புல்லாங் குழல்களில்!

மழைக் கனவுகளோடு
என்
பிள்ளைமனம்
செய்யும் காகிதக்
கப்பல்களை
புயல்களால் கிழிக்கிறாய்!

எந்த
விழிகளுக்குக் கண்ணீர்
எந்த
உதடுகளுக்குச் சிரிப்பு
என்பதெல்லாம் கூட
உன்
ஆணைப்படிதான்
அரங்கேறுகின்றன

பாதங்கள்
எம்மிடம் இருக்கலாம்;
பாதைகளை நீதான்
நிர்ணயம் செய்கிறாய்!

போதும்... காலமே போதும்
உன்
கைப்பிரம்பால் பட்ட அடி
போதும்... காலமே போதும்!

வாழ்க்கை
ஏதேனும் பரிசுதர
என்
வாசல் தேடும்போது
நீ
தவறான விலாசம்
தருகிறாய்!

நூலாக
என் நரம்புதானா
கிடைத்தது
கிழிந்த உன் மேலாடை
தைக்க?

என்
முற்றத்தில் படரும்
மேகம் பிழிந்தால்
சோகம் விழிகிறது!

பருகித் தாகம் தணிய
பாத்திரம் நிரம்பும்போது
நீ
ஓட்டை போடுகிறாய்!

மகரந்தச் சேர்க்கைக்காகப்
பூக்கும்
என்
நந்தவன மலர்களுக்கு
வெட்டுக்கிளிகளை
அனுப்புகிறாய்

என்னையே
கடைந்து கடைந்து
நான் எடுத்த
அமுதம் அபகரித்தாய்!
நியாயம்தானா... சொல்?

என்
அழுகை என்ன
உனக்கு
அனுராக கீதமா?

நீ
குத்திக் குத்திக்
காயம் செய்யத்தானா
எனது கண்கள்!

உனக்குத் தெரியுமா
நீ
கிழித்துப் போட்ட காள்சிகள்
என் ரத்தத்துளிகள் என்பது

உன்னிடம்
இருக்கும் கத்தரிக்கோல்
என்
கனாக்களை வெட்டிப்
போடவா?

என்
காற்றாடிகள் பறக்கவிட
கொஞ்சம்
காற்றுகள் தந்தால் என்ன?

சமைப்பதற்கு
நெருப்புக் கேட்டால்
என்னை எரிப்பதற்குத்
தீ மூட்டுகிறாய்

ஆடை கேட்டேன்
நிர்வாணம் மறைக்க

நீயோ
என் தோலுரித்துக்
செருப்புத் தைக்கிறாய்

ஓர்
அழகிய கவிதையாய்
என்னை
எழுதி வந்த
உன் பேனா
கடைசியில் எதற்குக்
கிறுக்கிவிட்டது.

போதும்...
காலமே போதும்

உன்
கைப்பிரம்பால் பட்ட அடி

போதும்...
காலமே போதும்...



சீதையைத் தேடிச் சென்ற
அனுமன் திரும்பி வந்தான்
இராவணன் தந்த பரிசோடு.





• தரையில் ஓடும் ரயில்கள் • உன் வாசலில் என் பாதங்கள் • நிலாவின் கீழ் சில நினைவுகள் • ஞாபகப் பூக்கள் • நேற்றின் ராகங்கள் • சூடு பறிக்கப்பட்ட சூரியன்கள் • கை நிறையக் கனவுகள் • சிறகுகளின் சுவடுகள் ஆகிய நூல்களை யாத்த கவிஞர் துறவியின் ஒன்பதாவது கவிதை நூல் இந்நூல்.

இவர்தம் கவிதைத் திறமையைப் பாராட்டித் தமிழக அரசு 1989இல் பரிசளித்துப் பெருமை சேர்த்தது.

இவருடைய நூல்களை ஆய்வு செய்து பலர் பட்டங்கள் பெற்றுப் பயனுற்றிருக்கிறார்கள்.

கடந்த முப்பத்திரண்டு ஆண்டுகளாக மைய அரசுப் பணியாற்றி, அண்மையில் ஒய்வு பெற்றுள்ள இவருக்கு இனி, கவிதைப் பணியே இனிக்கும் பணி.

சிறந்த சிந்தனைகளைக் கவிதைகளில் பதிக்கும் இவர், பரந்துபட்ட புகழ் விரியும் நூல்கள் பல படைத்து, மேலும் மேலும் தமிழுக்கு அணிசேர்க்க வாழ்த்துகிறோம்.

— பதிப்பகத்தார்